

உ
*சிவமயம்*
**ஆத்மஜோதி**
*தாபிதம்: 1948*

ARTHMA JOTHY
Est. 1948
ISSN 1703-9185

மலர் 5: இதழ் 4
*சுபானு வருடம்*
*சித்திரை - ஆனி*
*திருவள்ளுவர் ஆண்டு*
*2036*



**வெளியீடு**
ஆத்மஜோதி
தியான நிலையம்
பதிவு இல: 1476651

**தொடர்பு முகவரி**
Siva Muthulingam
217 Morningside Ave.
Apt. 912
Toronto, ON. M1E 3E4
Tel: (416) 724-6240
www.arthmajothy.org

## உள்ளடக்கம்







# திருக்கூட்டச்சிறப்பு

சிவனடியார் சங்கமத்துக்கு மற்றொரு பெயர் திருக்கூட்டம். பெரியபுராணத்திலே சேக்கிழார் பெருமான் திருக்கூட்டச் சிறப்பை எமக்கு உணர்த்தும் வகை உள்ளத்தை உருக்குகின்றது.

சிவனடியார்கள் அன்புள்ளம் கொண்டவர்கள். பூசுநீறுபோல் அவர்களது உள்ளம் புனிதமானது. சிவபெருமான் திருவடிகளைச் சிறிதேனும் மறவாதவர்கள். ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் பக்குவமனத்தையுடையவர்கள். கூடும் அன்பினில் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறல் படைத்தவர்கள்.

இத்தகைமையை எளிதில் எய்திவிட முடியாது. இறையருளும் முயற்சியும் பயிற்சியும் வேண்டும்.

இறையருளைப் பெறுவதற்கு இந்து சமயப் பேரவைச் சிவனடியார் திருக்கூட்டத்தினர் மேற்கொண்டுவரும் முயற்சிகள் முன்மாதிரியானவை. கோயில் வழிபாடு என்ற அளவில் நின்றுவிடாது, பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமானுக்கு உவப்பான உயர்பணிகளிலும் இவர்கள் ஈடுபட்டு வருகிறார்கள்.

கோயில்கள் தோறும் திருமுறை ஓதும் திருப்பணியைப் பல ஆண்டுகளாகச் செய்து வந்த இச்சீரடியார் நாவலர் பெருமானின் 125ஆவது குருபூசை விழாவையொட்டி அவருக்குச் சிலை ஒன்றை அமைத்த வரலாற்றுச் சாதனையையும் புரிந்திருக்கிறார்கள். நோய்வாய்ப்பட்ட அடியார் பொருட்டு அவர்களுக்காக வழிபாடுகளையும் நடத்தி வருகிறார்கள்.

இவர்கள் ஒவ்வொருவரும் வெவ்வேறு விதமான அனுபவ நிலையில் உள்ளவர்கள். இருப்பினும் ஒற்றுமையாகவும் அடக்கமாகவும் தமது ஆன்ம பக்குவத்துக்கான ஆயத்தங்களாகவே தமது பணிகளை மேற்கொண்டு வருகிறார்கள்.

தங்களைப் பக்குவஞ்செய்ய இவர்கள் நாவலர் பெருமான் விழாக்காலத்தில் மேற்கொண்ட மற்றுமொரு புதிய முயற்சி ‘அடியார் அறிவுக்களம்’ என்பதாகும். கேள்வி - பதில் முறையில் சமயத்தில் இருக்கும் ஐயங்களைத்தீர்த்துக் கொள்ள இவ்வறிவுக்களம் இவர்களுக்கு நன்கு பயன்படுகிறது.

மெய்ப்பொருள் காண முனைந்து மெய்யடியார்களாக விளங்க இவர்களை ‘ஆத்மஜோதி’ வாழ்த்துகிறது.

# உ
# எங்குமுள்ள பிள்ளையார்

### கோண்டாவில் கிழக்கு
### அரசடிப்பிள்ளையார்

மொழிப்பிள்ளை அவ்வைக்கு மகிழ்ந்து முன்னாள்
முத்தமிழைக் கனிவித்த மூத்த பிள்ளை
தொழிற்பிள்ளை முயல்வோர்க்குத் துணையாம் பிள்ளை
துயர்களையும் அருட்பிள்ளை தொடர்ந்து செல்வம்
கொழிக்கின்ற செழிப்புற்ற செம்மண் தோட்டக்
கோண்டாவில் அரசடியிற் குடிகொண்டுள்ள
வழிப்பிள்ளை மலரடிகள் வணங்கிச் செல்லும்
வழிவாழ்வுக் கெற்றவளம் வழங்கு மாமே

### திருநெல்வேலி
### தலங்காவற் பிள்ளையார்

அரியவெளி யண்டசரா சரத்தின் ஆதி
அம்மையப்பர் மகிழத்தலை மகனு மாகி
வரவலிமை யுடையகய முகனை வென்றார்
மண்ணவரும் விண்ணவரும் வணங்க நின்றார்
தருமநெறி தழைத்தோங்குந் திருநெல் வேலி
சார்ந்தழகுத் தலங்காவற் பிள்ளை யாக
அருள்புரிவார் அன்பர்களே பாரீர் வாரீர்
அவர்கமலத் திருவடிகள் அடைந்துய் வாமே

### மயிலிட்டி வருத்தலைவிளான்
### மருதடி விநாயகர்

ஒருத்தருமே எனக்கில்லை உன்னை விட்டால்
ஒப்பில்லா வென்னெஞ்சே ஒருசொற் கேளாய்
தெருத்தெருவாய் அலையாது சிறுவர் கூட்டம்
சேராது செல்லாத செயல்செய் யாது
விருத்திபெற வேண்டுமெனில் விரைந்து சென்று
வித்துவான் கணேசையர் தவம்மேற் கொண்ட
வருத்லைவி ளான்பதியில் மகிழ்ந்து வைகும்
மருதடிவி நாயகரை வணங்கு வாயே





### குப்பிளான்
### கற்கரை கற்பக விநாயகர்

குப்பையிலே கிடந்தாலுங் குணங்கள் கண்டு
குறைபோக்கி நிறைவாக்கிக் கோபுரததில்
வைப்பதிலே வல்லவராம் வார்க ரத்தார்
வளர்தென்னை பனைசோலை வளஞ்செய் தோட்டக்
குப்பிளானின் கற்கரையிற் குடிகொண் டுள்ளார்
கொண்டாடிக் கற்பகவி நாய கர்தாள்
செப்பிறிதம் திருமுறைகள் சேவிப் பார்க்குச்
திருவாகும் வினையாவுந் திண்ண மாமே.

### குப்பிளான்
### சோதி விநாயகர்

ஆக்கங்கள் அளித்திடுவார் அல்லல் தீர்ப்பார்
அழமுன்னர் அருளமுதம் அள்ளி வார்ப்பார்
ஊக்கத்தால் உயர்வானார் ஒப்பில் லாத
ஒழுக்கத்தால் உயர்வானார் உண்மைச் சைவ
வாக்குக்கே தாமானார் வாமும் ஊராம்
மாதவத்துக் குப்பிளானை மதித்து நாளும்
காக்கின்ற சோதிவிநா யகர்தாள் கண்டு
கசிந்துருகிக் கண்ணிலொற்றிக் களித்துய் வாமே

### இணுவில்
### செகராசசேகரப்பிள்ளையார்

தகவான சைவநெறி தழைக்க வேண்டின்
தருமவழி பொருள்தேடி உழைக்க வேண்டின்
மகிழ்வோடு வாழ்வாங்கு வாழ வேண்டின்
வல்லதமிழ் வையமளந் தாள வேண்டின்
புகழ்மேவு கலைவாணர் புலவர் வாழும்
புண்ணியமா பதியிணுவை பொலிந்தி லங்கும்
செகராச சேகரனார் சிரம்ப ணிந்த
சிவபெருமான் பிள்ளைகழல் சேவிப் பாமே

# 3. The Holy Ash

31. What is the symbol found in the Sivalingam in a Temple?
The Holy Ash called 'Viboothy" in the scriptures.

32. What is 'Viboothy" or The Holy Ash?
The white ash obtained by burning the dried cow dung in fire.

33. What do we have to do with the "Holy Ash"?
We must apply it on our forehead with the three middle fingers of the right hand, looking up at the direction of the sky, and chanting "OHM NAMASIVAYA"

34. What can we do if accidently some Holy Ash had slipped from our hand and fallen down?
We should not trample on it with our feet. We should take it with our hand and clean the place with a cloth or paper. Nothing should be left there to be trampled by others.

35. When a Priest or a Devotee gives us the Holy Ash what should we do?
We should worship God, raising both our hand up above our head, holding both of our palms together and then bring down our hands, keep our middle right palm on the middle of our left palm and bow down respectfully while receiving the Holy Ash.

36. How should the Holy Ash be applied?
We could apply it on forehead in either of the two ways called 'Uthlanam" or Thiripundaram."

37. What is "Uthulanam"?
Applying the Holy Ash without forming separate lines is called 'Uthulana" application.





38. What is 'Thiripundaram"?
Applying the Holy Ash forming three separate lines on our forehead. This is done by mixing the Holy Ash with little water and forming a kind of paste. Thiripundaram means three lines.

39. What are our physical organs where we can apply Holy Ash in "Thiripundara" method.?
We should apply this form on our head, forehead, chest, navel, both knees, both shoulders, both elbows, both wrists, both back bones, the back side, and the neck altogether 16 organs of our body.

40. What are the benefits that could be derived by applying the Holy Ash - 'Viboothy"?
1. Growth of Divine love
2. Generate purity of heart
3. Remove grief
4. Cure illness
5. Get success
6. Achieve 'Mukthi" - Salvation or liberation from the chains of birth and death.



ஆத்மஜோதி முத்தையா சுவாமிகளின் ஜெயந்தி விழாவை முன்னிட்டு நடத்தப்பட்ட இஷ்ட தெய்வ நாம ஜெபப் போட்டியில் பங்குபற்றிப் பரிசில்கள் பெற்ற சிறார்கள்

# சித்தாந்த ஞானக் களஞ்சியம்

## நூலாய்வு

### பேரறிஞர் முருகவே பரமநாதன்

கடந்த இதழ் தொடர்ச்சி:

ஐயா அவர்கள் நாவலர் பெருமானின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வாழ்ந்த சைவப் பெரியார். கடைசி மூச்சுவரைக்கும் சைவத்திற்கும் தமிழுக்கும் உழைத்தவர். சைவமக்கள் ஆஞ்சநேயர்போன்ற சிறு தெய்வ வழிபாடு செய்வதைக் கண்டித்துள்ளார். இலங்கைத் தமிழர் குறிப்பாக யாழ்ப்பாணச் சைவமக்கள், இந்து சமயம் என்ற பெயரால் இன்று திசைதிருப்பப்படுகின்றனர். சைவக்கோயில் அதிகாரிகளும் சில பெரியவர்களும், சுமார்த்தம் சார்ந்த பிராமணரின் சூழ்ச்சியில் விழுந்து சைவநிந்தனை செய்கின்றனர். இதனை ஐயா அவர்கள் வன்மையாகக் கண்டித்துள்ளார்.

**ஐ. குலவீரசிங்கம் மலேசியா**

சைவசித்தாந்தம் என்ற மாபெரும் பண்பாட்டுக் கட்டிடத்தின் முழுமையை உணர்ந்து தெளிவதற்குரிய காலமேதையாக விளங்கியவர் அமரர் ஏழாலை கந்தையா அவர்கள் ஞானத்தால் கிரியையும், கிரியையால் ஞானவிளக்கத்தையும் மக்கட் சமுதாயம் உணர்ந்து தெளியுமாறு, சமன்மைப்படுத்தி எழுதும்திறமை வாய்ந்த தவச்செல்வம் உடையவர் ஏழாலைக் கந்தையா அவர்கள் எனக் கூறி வணங்குவது சான்றாண்மையாம்.

**பேராசிரியர் முனைவர் வை. இரத்தினசபாபதி தமிழ்நாடு**

இலக்கிய கலாநிதி பண்டிதர் மு. கந்தையா அவர்களின் செயன்முறை சைவசித்தாந்த தத்துவத்தின் ஆழத்தையும், அகலத்தையும் சமகால வாசகனுடைய கவனத்திற்கு இட்டு வருவதைக் குறிக்கோளாகக் கொண்டது. அக்குறிக்கோளை அவர் சிறப்புற நிறைவு செய்துள்ளார் என்பதே எனது கணிப்பாகும்.

**கலாநிதி நா. சுப்பிரமணியன் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்**

ஏழாலையிலே தோன்றிய முத்தர் கந்தையா அவர்கள் ஒரு முழுநேரப்படிப்பாளர். அவர்தம் வாழ்நாள் முழுவதையும்கற்றல், கற்பித்தல், ஆராய்தல், அறிவு திரட்டுதல், கருத்தாடல்களில்





ஈடுபடுதல், தாம்குறையெனக்கண்டவற்றைக் கண்டித்தல், தாம் சிறந்தவை எனக் கண்டறிந்தவற்றைப் பிரசாரம் செய்தல் ஆகிய முயற்சிகளின் பொருட்டே அர்ப்பணம் செய்தார். இதனால், அறிஞர் உலகில் நன்கு அறியப்பட்ட சிந்தனையாளராய்த் திகழ்ந்தார்.

**கவிஞர் இ. முருகையன்**

பத்துப்பன்னிரண்டு வருடங்களுக்கு முன் ஒருநாள் நல்லூரில் ஒரு விழா முடிவில், சில இளைஞர்கள் மு.க. வைச் சூழ்ந்து கொண்டார்கள். ஒருவர் கேட்டார்: ஐயா, கவிதை இயற்றுவதற்கு என்ன செய்ய வேண்டும்? மு.க. ஒரு குறும்புச் சிரிப்போடு, கேட்ட இளைஞனின் காதுக்குள் சொன்னார் கவிதை தானாக வர வேணும்.

**கவிஞர் சோ பத்மநாதன்**

இவ்வகையில் பண்டிதரையா அவாக்ள் எம்போன்ற பலருக்குக் காட்சியாலும் அரவணைப்போடு கூடிய ஆழமான பேச்சுக்களாலும் உடனுக்குடனாய் சந்தேக நிவர்த்திகளாலும் குருவாக அமைந்தவர். சைவசித்தாந்தக் கல்வி புகட்டினார் என்பதைவிட சைவசித்தாந்த உணர்வை ஊட்டினார் என்பது போற்றுதற்குரியது. பண்டிதர் ஐயாவுடன் எமக்கேற்பட்ட தொடர்பு திருவருட் கருணையின் வெளிப்பாடே.

**செ. சொக்கலிங்கம் B.Sc. ஏழாலை**

இதைத் தொடர்ந்து வரும் தொடர்பு சாதன செய்திக் களஞ்சியத்தில் பதினொருவர் தமது கருதுகோள்களை வெகுஜனத் தொடர்பு சாதனங்களிலொன்றான பத்திரிகை சஞ்சிகை வாயிலாக வெளிப்படுத்தியுள்ளனர். அவர்களில் மூவர் கனடாவில் வசிப்பவர்கள் (தி. விசுவலிங்கம், வி. கந்தவனம், முருகவே பரமநாதன்)

கவிதைக் களஞ்சியத்தில் புகழ்பூத்த புலவர்கள் ஒன்பது பேரின் ஆக்கங்கள் இடம்பெற்றுள்ளன. இன்று கவிஞர்க்கோ பஞ்சம் இல்லை. கருவுக்குத்தான் பஞ்சம். பெரும் புலவரான கந்தையரை வென்ற புலவர்களைக் காண்பது அரிது. கம்பனொடு கவி போயிற்றென்றான் பாரதி. பாரகாவியங்கள் பல தந்த கவிக்கோ பற்றிய சில மரபுக்கவிதைகளை மட்டும் இங்கே கோடிகாட்டி மறுபகுதியுள் நுழைவோம்.

இவரிடத்தே புகழ்தேடிச் சென்றதுவே அல்லால்
புகழ்இடத்தை இவர் தேடிச் சென்றதில்லை என்னும்
தவமுனிவர் கொண்டிருக்கும் அடக்கத்தைக் கொண்டான்
தமிழுடன் ஆங்கிலமும் ஆரியமும் தெளிந்தார்.

**புலவர் ம. பார்வதிநாதசிவம்**

தத்துவமும் வித்துவமும் அத்துவித மாகி யொரு
சத்தியவான் தோற்றம் தரித்துள்ள - சுத்தசிவ
கந்தையர் போன்ற கதி ரொன்று தோன்றவினி
எந்தயுகம் ஆகும் இயம்பு

**கவிஞர் வி. கந்தவனம்**

நடமாடும் நூல்நிலையம் ஆகிநின்றான்
நாடினர்தம் ஐயமொடு திரிபும் தீர்ப்பான்
புடமிட்டிங் கெடுத்துள்ள பொன்னே போல்வான்
போற்றுதமிழ்ப் பண்டிதர் மணியு மானான்
மடமையிருள் அகற்றுமிள ஞாயி றொப்பான்
மூதறிஞன் கந்தையா முன்பன் தானும்
திடமுடனே தூக்குபதம் தேடி வந்தான்
திகம்பரனே அருள்புரிதி போற்றி போற்றி

**புலவர்மணி பண்டிதர் க. மயில்வாகனனார்**

சைவனென் றேவாழ்ந்த தண்ணார் தயாநிதிநம்
உய்திபெறு வாழ்வின் ஒளியானாய் - பையநுழை
வேற்றுமதக் கூறுகளை வேரோடு கல்லுதற்காய்
மாற்றமளி நாவலனா னாய்

**பண்டிதர் சி. அப்புத்துரை**

கந்தையாப் பண்டிதர் தம் சிந்தனை வண்ணத்தில் எழுந்த நூல்களிற் காத்திரம் கனதி வாய்ந்த சின்னூற்குணைக் கல்விவல்லார் மூலம் ஆய்வுசெய்து தகவுரைபோல் தொடுத்து வெளியிட்ட பகுதிதான் நூற்களஞ்சியமாம்.

**நூல்களிற்குத் தகவுரை வழங்கியவர்கள்**

சித்தாந்தச் செழும்புதையல் - மட்டுவில் ஆ-நடராஜா
சித்தாந்த விளக்கிற்சைவக்கிரியைகள் பண்டிதர் சி. அப்புத்துரை





சிவஞானசித்தித்திறவுகோல் -கலாநிதி குமாரசாமி சோமசுந்தரம்
அரியவும் பெரியவும் - ச. விநாயகமூர்த்தி
பெரியபுராணம் என வழங்குகின்ற திருத்தொண்டர்புராண சூசசனம்
அ. விசுவநாதன் B.A.
சைவசித்தாந்த நோக்கில் கைலாசபதிஸ்மிருதி
ஆ. சபாரத்தினம் M.A.
திருக்கேதீச்சரமான்மியம் - பண்டிதர் வ. பேரின்பநாயகம்
மாவைப்பிள்ளைத்தமிழ்
நாவலர்பிள்ளைத்தமிழ்
வல்லிபுரமாயவன்பிள்ளைத்தமிழ்
சுதுமலைபுவனேஸ்வரி அம்மைபிள்ளைத்தமிழ்
பிள்ளைக்கவி வ. சிவராஜசிங்கம்
திருக்குறள் ஒழிபியல் - சிவசண்முகவடிவேல்
சைவசித்தாந்தத்தில் மாயை உண்மை - திருமதி கலாதேவி பொன்னம்பலம்

நூல் ஆய்வாளர் தந்த விழுமியமிக்க அபிப்பிராயங்கள் இவ்வண்ணம் அமைந்துள்ளன:-

1. **சித்தாந்தச் செழும்புதையல்**

இவ்வாற்றால் சைவசித்தாந்தம் பற்றி அறியவிரும்புவோர் திரும்பத் திரும்பக் கருத்தூன்றிப் படிக்க வேண்டியநூல்.

2. **சித்தாந்த விளக்கிற் சைவக்கிரியைகள்**

சைவசித்தாந்த நிலப்பரப்பினுள்ளிருந்து எல்லோர்க்கும் காண்பதற்கரிதாயுள்ள அரும் பொருட்புதையல்களை வெளிக் கொணர்ந்தவர் ஏழாலையூர் பண்டிதர் மு. கந்தையா அவர்கள். இப்புதையல்களுக்குச் ‘சித்தாந்தச் செழும்புதையல்கள்’ எனப் பெயரிட்டு நூல் வடிவங் கொடுத்தது ஈழத்துச் சித்தாந்த சைவவித்தியாபீடம்

3. **சிவஞான சித்தித் திறவுகோல்**

இவ்வாறு சிவஞான சித்தியாரின் பிழிந்தசாரமாக ஏழாலையூர் பண்டிதர் மு. கந்தையா அவர்களின் ‘சிவஞானசித்தித் திறவுகோல்’ என்னும் நூல் விளங்குவதோடு, சைவசித்தாந்த அடிப்படை உண்மைகளை இலகுவாக விளங்கிக் கொள்வதற்கு உறுதுணையாகவும் உள்ளது.

4. **அரியவும் பெரியவும்**

அடியார்கள் வரலாறுகளையும், அவர்கள் பெற்ற திருவருளின்

அருமையையும், அவர்களுக்கும் ஆண்டவனுக்கும் இடையே இருந்த அன்புத் தொடர்பையும் அதியற்புதமாக விளக்கும் பெரியபுராணம் சரித்திரமாகவும் தோத்திரமாகவும் சாத்திரமாகவும் போற்றப்படும் திருநூல். அதனைச் சைவஉலகம் அணுக வேண்டியமுறையில் அணுகி உய்திபெற வேண்டுமென்ற உந்துதலினால் பண்டிதர் அவர்கள் எழுதிய நூல் பெரியபுராணத்தைப் பற்றிய அரிய பெரியசிந்தனைகளைக் கொண்டுள்ளது.

5. **பெரியபுராணம் என வழங்குகின்ற திருத் தொண்டர் புராணசூசனம்**

சிவகரணம் வாய்க்கப்பெற்ற மெய்யடியார்களின் வரலாறுகளின் உட்பொருளள பசுஞானத்தால் உணரமுடியாது. அவற்றை நம்பமுடியாத பொய்க்கதையென்பர். ஆனால் பசுஞானம் உடையோர்க்கும் விளங்கக்கூடியதாய்ச் சொல்லவல்ல மெய்யறிஞர் பண்டிதர் மு.க. அவாக்ள்.

6. **சைவசித்தாந்த நோக்கில் கைலாசபதி ஸ்மிருதி.**

இவ்வாறு பெரும்பான்மையும் ஒத்தும் சிறிதளவு வேறுபட்டும் ‘கைலாசபதி சிந்தனைகள்’ என்ற சமுத்திரத்தைக் கடந்த அறிஞர் வரிசையில் முதலாவது இடம் பெறுகிறார் நம் ஆசிரியர் மு.க.

7. **திருக்கேதீச்சர மான்மியம்**

மிகுசைவத்துறை விளங்க வைக்கின்ற திருக்கேதீச்சரமான்மியம் சைவத்தமிழ் மக்களுக்கோர் வரப்பிரசாதம்.

8. **மாவைப்பிள்ளைத்தமிழ்**

மாவைப்பிள்ளைத்தமிழ் அண்மைக்காலத்தில் எழுந்ததாயினும் தொடை நோக்கிலும் நடைநோக்கிலும் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ் குமரகுருபரரின் முத்துக்குமாரசாமிப்பிள்ளைத்தமிழ் திருவிரிஞ்சைமுருகன் பிள்ளைத் தமிழ் போன்றவற்றின் சாயலைக்காணலாம்.

9. **நாவலர் பிள்ளைத்தமிழ்**

நாவலர் பெருமானின் வரலாற்றுண்மை அத்திவாரமாகவும் பாடல்கள் சுவர்களாகவும், பல்வகைச் சந்தங்கள் பலவர்ணப் பூச்சுகளாகவும் பணிகள் பிரதிட்டாமூர்த்தியாகவும் இறவாத புகழ் மணிமுடியாகவும் அமைந்து இலங்குமாறு கவிதாசிற்பியாகிய கலாநிதி கந்தையா அவர்கள் அமைத்த கலைக்கூடமாகத் திகழ்கிறது நாவலர்பிள்ளைத்தமிழ்.

10. **வல்லிபுரமாயவன் பிள்ளைத்தமிழ்.**

நூலின் நுழைவாயிலில் தக்கவைத்துத் தலத்தின் சிறப்பினைக் காட்டுகிறார் ஆசிரியர். மருதநிலத்தில் இயற்கைவனப்புமிக்க சப்திக்கின்ற கடற்கரையை அண்மித்த தலம் பெருஞ்சாலைகள், சுவடு, மணற்குன்றங்கள், பெண்கள் கூந்தலை நினைவுபடுத்தும் அறல்வரிகள், பூந்துணர் தூங்கும் இருப்பை, செந்தாமரைக்காடாய்க் கிடக்கும் தாமரைத்தடாகம், அரவின் பசுந்தலையன்ன செவ்வல்லி மொட்டுக்கள், துரவுகள், நீண்டதூரம் பரந்து விரிந்திருக்கும் வயல்கள் இவையெல்லாம் வல்லிபுரத்தான் தந்த வளம் என்பது அவர் போக்கு.

11. **சுதுமலை புவனேஸ்வரி அம்மை பிள்ளைத்தமிழ்**

அதிவிஷேசமாக உள்ள பருவம் ஊஞ்சற்பருவம் ஆகும். பிறவிகள் வருவதும் போவதும் ஆகிய ஆட்டம். ஊஞ்சல் வருவதும் போவதும் போல்வதாகிய ஒரு ஆட்டம். அந்த ஆட்டத்தை நிகழ்த்தும் சக்தி உள்ளார்ந்த ஒரு ஊஞ்சல் அமைப்பினைச் செய்து உயிரை ஊஞ்சலாடிக் கொண்டிருப்பதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

12. **திருக்குறள் ஒழிபியல்**

இலக்கியகலாநிதி பண்டிதமணி கந்தையா B.A. அவர்களின் உரைவிளங்கத் தமிழ்த் தொண்டு என்றும் நிலைக்க, அத்தமிழ்ப் பணியை நுகரும் தமிழ் உலகு இன்புற்றுத்தளைப்பதாக.

13. **சைவசித்தாந்தத்தில் மாயை உண்மை**

இம்மாயையின் இருப்பு வேதம், உபநிடதம் முதலாக மெய்கண்ட சாத்திரங்கள் ஈறாக உள்ள சைவசாஸ்திரங்கள் எல்லாவற்றிலும் விளக்கம் பெற்றுள்ளது.

இவ்வுண்மைகளையெல்லாம் வகுத்தும் தொகுத்தும் விளக்கமாகவும் தர்க்கரீதியாகவும் கூறுகின்ற பண்டிதர் ஐயாவின் மேற்படி நூல் கிடைத்தற்கரிய பொக்கிஷமாகும்.

சிந்தனைத்திறனாய்வாளரின் எண்ணக்கரு பேசும் பேனாவழி சிந்திய இருபத்தொரு கட்டுரைகள் ஒரு களஞ்சியமாகத் தந்திருக்கிறார்கள் நூலாக்கவியலாளர்

ஐயாகாலத்துக்குக் காலம் மொழிக்கு, சமயத்துக்கு, சமுதாயத்துக்கு, வதிவிடத்துக்கு ஏற்பட்ட தாக்கங்களை உன்னி உன்னிப்பல உண்மைகளை வெளியிட்டார். கண்டிப்பதைக்கண்டித்தார். நல்லதைப் போற்றினார். அல்லாததை வெறுத்தார். இதனாற்பலர் அவரை எதிர்த்தனர். அவரதற்கு மசியாமல் படித்து இடித்துச் சொன்னார். நாவலர் சிலை நகர்த்தல், சைவசமயத்தைத்திட்டமிட்டு இந்துமதமாக்க முயன்றதீவிரம், எமக்கு ஒப்புதல் இல்லாத தெய்வங்களைப் புகுத்தி சைவத்தைச் சிதைக்க எடுத்த முயற்சிகள், பிராமணீயக் கொடுமைகள், ஆலயநிர்வாகச்சீர்கேடு, ஆஞ்சனேயர்,

சாஸ்தாவழிபாட்டுமுனைப்புப் போன்றவை தலைதூக்கவிடாமல் அதிதீவிரமாக எதிர்க்க அவர் பின்னிற்கவில்லை. அப்படிப் பன்முகமான கட்டுரைகளின் அபூர்வகொழுப்பே கட்டுரைக்களஞ்சியம். இதை நின்று நிதானித்தும் படிக்கமுன் வருவார்களேயாயின் சைவம் சின்னாபின்னமாகாது. படித்துப் பாருங்கள். முழுமை பெறுவீர்கள்.

நிறைவுரையாக அமைந்தது ஆய்வுக்களஞ்சியம். இதிலேதும் கைவண்ணங்களை இரசம்மிகத் தீட்டிய அறிஞர் பெருமக்கள் பல்துறை சார்ந்த மேதைகள். ஆக, சித்தாந்தஞானக்களஞ்சியம் நூல்நிலையத்தை அணிசெய்யும் மலர் மட்டுமன்று. கல்வியாளரை மலரவைத்து மனதுக்கு இதமளிக்கும் ஆழமான சிந்தனைக் கருவூலமுமாம் இன்னோர் அம்சம். பல்திறப்பட்ட தமிழ்வசன நடைமேன்மை மேதைகளின் தனித்துவம் அது. மலரின் 50ஆம்பக்கத்தில் 20ஆம் வரியில் இருந்து 57ஆம் வரிமுடிய வாசித்துப் பாருங்கள் புரியும் (மாதிரிக்கு)

இந்நூலை அமைத்துத் தந்த அச்சக அமைப்பாளரையும் இந்நூலின் நெறியாள்கையாளரையும் மெச்சாதிருக்க முடியவில்லை. என்றும் எங்கும் சைவமும் தமிழும் சமூகமும் சிறக்க உழைத்த தமிழாகரன்தான் கந்தையர்.

பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ
நூலெல்லாம் வள்ளுவன் நூலாமோ
நினைவுமல ரெல்லாம் கந்தையர்நினைவு மலராமோ

ஓம் சாந்தி சாந்தி சாந்தி.



வைகாசி விசாகப் பெருவிழாவில் தெய்வீக வாழ்க்கை என்ற நூலின் முதற் பிரதியை பெறும் காட்சி





# வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்

**ஞானசுரபி ஆத்மஜோதி நா. முத்தையா**

கபடச் செயல்களைச் செய்யும் கீழ் மக்களுடன் சேராதே என்பது பொருள். மக்களில் ஐந்து வகையினரைப் பெரியோர் அறிமுகப்படுத்தியிருக்கின்றனர். பிறரை அழித்துத்தான் வாழ நினைப்பவன் துரோகி. பிறரைப் பற்றி அக்கறை இன்றி வாழ்பவன் சுயநலவாதி. பிறரும் வாழத் தானும் வாழ்பவன் மனிதன். பிறர் வாழவே தான் வாழ்பவன் புனிதன். பகைவர் வாழத் தன்னை இழப்பவன் தெய்வீகன். முதலிரண்டு நிலையும் நம்மிடம் இருக்க வேண்டாம். கடைசி இரண்டு நிலையைப் பற்றியும் கவலைப்பட வேண்டாம். இடையில் நிற்கும் மனிதனாகவே வாழ்ந்தாலே போதியது. நாம் மனிதர்களாகப் பிறந்துவிட்டோம். ஆதலால் மனிதனாக வாழ்ந்துதான் ஆகவேண்டும். எல்லோரும் மனிதராக வாழ்ந்துவிட்டால் அல்லோல கல்லோலமே இருக்க முடியாது.

மனிதன் மிருக நிலைக்கு இறங்கும்போதுதான், கோடுகள், பொலீஸ் நிலையங்கள், மறியற்கூடுகள் தேவைப்படுகின்றன. மிகக்கொடிய செயல்களைச் செய்பவர்களைக் கயவர் என்ற பெயரால் வள்ளுவர் குறிப்பிடுகிறார். கயமை என்பது கீழ்மக்களின் தன்மை. மனித சமுதாயத்தின் நல்வாழ்விற்கு விரும்பத்தக்கனவாக எந்த நற்குணமும் இல்லாத மிகவும் கீழ்த்தரமான மனிதர்களும் இருக்கவேதான் செய்கிறார்கள். இவர்களைச் சிற்றினத்தவர் என்றும் பெரியோர் அழைப்பர். அறிவிலும், குணத்திலும், ஒழுக்கத்திலும் இழிவானவர்களே சிறறினத்தார். அவர்களுடன் சேராமல் இருக்க வேண்டும். சேர்ந்தால் அவர்களது இழிந்த குணங்கள் நம்மையும் தொற்றிக் கொள்ளும். தக்காரோடுதான் நாம் சேரவேண்டும். அவாக்ளோடு சேர்ந்தால் பல நன்மைகள் உண்டாகும். பெரிய இனத்தோடு சேருவதில் எவ்வளவு கவனம் வேண்டுமோ அவ்வளவு கவனத்தோடு சிறு இனத்துடன் சேர்ந்துவிடாமல் இருக்க வேண்டும். ஏன் எனில் சிற்றினச் சேர்க்கையால் பல தீமைகள் வரும் என்பது எச்சரிக்கை. வஞ்சக நெஞ்சகமுடையவனைப் பற்றி வள்ளுவர் பின்வருமாறு கூறுகிறார்.

வஞ்சக மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்
ளைந்து மகத்தே நகும்.

துறவறத்தை மேற்கொண்டு கபடமாகக் கள்ளமாக வாழ்க்கை

நடத்துகிறவனைப்பற்றி அவன் தேகத்திலுள்ள பஞ்ச பூதங்களும் தமக்குள் சிரித்து ஏளனம் செய்யும். துறவறத்தில் இருந்து கொண்டு அதற்குத் தகாத கள்ள வாழ்க்கை நடத்துகிறவனுடைய செயல்கள், மற்றவர்களுக்குத் தெரியாவிட்டாலும் அவனுள் இருக்கும் பஞ்ச பூதங்களுக்காவது தெரியும். அந்த ஐந்து பூதங்களும் அகத்தே நகும் என்றதனால் அவனுடைய மனச்சாட்சியே அவனை ஏளனம் செய்யும் என்பது கருத்து.

"மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்டதில்"

கயவர் என்று சொல்லப்படுகிற் கீழ்மக்கள் மனிதர்களைப் போலவே இருப்பார்கள். ஆனால் அந்தக் கயவர்களைப் போலவே இருப்பவர்கள் வேறெவரும் உண்டோ எனில், நாம் பார்த்த வரையிலும் ஒருவரும் இல்லை. வெளித் தோற்றத்தில் கயவர்கள் மற்ற மனிதர்களைப் போலவே இருப்பார்கள். ஆனால் அவர்களிடத்தில் மனிதத் தன்மையே இருக்காது. மனிதத் தன்மை இல்லை என்றால் வேறு என்ன தன்மை இருக்கும்? என்றாலும் அதற்குச் சரியான உவமை சொல்ல முடியாது. அவர்களுக்குச் சரியான உவமானம் நம்மாற் சொல்ல முடியவில்லை என்பதுதான் சிறந்த பொருள். அதாவது கயவர்கள், இனத்தில் மனிதர்களோடு சேர்ந்தவர்களே' ஆனால் குணத்தாலும் செயலாலும் அவர்கள் யாரோடும் சேர்ந்தவர்கள் அல்ல.

கயவர்கள் நன்மை தீமைகளை ஆராயும் அறிவாளிகளைவிட பாக்கியசாலிகள். எப்படியெனில் அவர்கள் மனதில் நன்மை தீமைகளைப் பற்றிய விசாரமே கிடையாது. நன்மை தீமைகளை ஆராய்ந்து நடக்கிறவர்களுக்கு தீமை செய்து விடக்கூடாது என்ற கவலை இருந்து கொண்டே இருக்கும். அந்தக் கவலை இயல்பாகவே கயவர்களுக்கு இருக்காது. அதனால் தீயகாரியங்களையும் நல்ல காரியங்களைப் போலவே கவலையற்றுச் செய்வார்கள். கவலை இல்லாமல் வாழ்வது ஒரு பாக்கியமல்லவா? அதனால் கீழ்மக்கள் நன்மை தீமைகளைப் பற்றி ஆலோசிக்கிற அறிவாளிகளைவிட அதிட்டசாலிகள். ஏனெனில் அவர்கள் நெஞ்சில் இயற்கையாகவே நன்மை தீமைகளைப் பற்றிய கவலை கிடையாது.

கயவர்கள் மனிதப் பண்புகள் இல்லாமலும், மனிதர்களைப் போலவே இருக்கிறார்கள். நல்லறிவு இல்லாமலும் நல்லறிவுள்ள மனிதர்களைவிட சந்தோசமுடைய பாக்கியசாலிகளாக





இருக்கிறார்கள். அதுமட்டுமல்ல, அவர்களை மனிதர்களுக்கும் மேலான தேவர்கள் என்று கூடச் சொல்லிவிடலாம். தேவர்கள் உலகநீதி நெறிகளுக்கு அடங்கி நடப்பவர்கள் அல்ல. அதைப் போல் கீழ் மக்களாகிய கயவர்கள் சமூகநீதிநெறிகளை மதிக்காமல் தம்முடைய இச்சைப்படி எதையும் செய்கிறவர்கள். மனித சமூகத்தின் சட்டதிட்ட ஒழுங்குகளுக்குக் கட்டுப்பட்டு நடப்பவர்கள் அல்ல என்பதற்காகக் கயவர்கள் தேவர்களோடு சேர்ந்தவர்களென்பது ஏளனமாகச் சொன்னதன்றி கயவர்கள் தேவர்களை அறிந்தவர் களுமல்ல; விரும்புகிறவர்களுமல்ல.

அகந்தை மிகுந்த போக்கிரிகளைக் கண்டால் கீழ்மக்களாகிய கயவர்கள் அவர்களுடன் சேர்ந்து போக்கிரித்தனத்தில் அவர்களுக்கும் மிஞ்சினவர்களாகக் கும்மாளம் போடுவார்கள். அதுதான் கயவர்களின் கெட்டித்தனம். அவர்களுக்கு ஒழுக்கம் என்பதே கிடையாது.

இரண்டே சந்தர்ப்பங்களிற்றான் அவர்கள் ஒழுக்கம் உள்ளவர்கள் போல் அடங்கி நடப்பார்கள். முதலாவதாக, தம்மினும் வலிமை உள்ளவர்கள் தம்மைத் தண்டித்து விடுவார்கள் என்று அஞ்சுகிற வேளைகளில் கீழ்மக்கள் ஒழுங்காக நடந்து கொள்வார்கள். அடுத்ததாக யாரிடத்திலாவது ஒரு பொருளைப் பெறவேண்டுமென்று ஆசைப்படுகிற வேளையிலும், அப்பொருளைப் பெறுமளவும் சிறிது ஒழுங்காக நடந்துகொள்வதும் உண்டு.

தம் காதில் விழுகிற இரகசியங்களை, பல இடங்களுக்கும் தாமே சென்று வலியச் சொல்லும் குணத்தால் கயவர்கள், பறை சாற்றும் தமுக்குக்குச் சமமானவர்கள். மேலும் கயவர்கள் தம்மிடத்திலுள்ள எதையும் யாருக்கும் நல்ல வழியில் துளிகூடத் தாமாகக் கொடுக்க மாட்டார்கள். வேண்டியதைச் சொன்னவுடன் உதவி செய்கிறவர்கள் மேன்மக்கள். கரும்பை ஆலையில் கொடுத்து பிழிவதைப்போல் நெருக்கினால்மட்டும் கொடுப்பவர்கள் கீழ்மக்கள். தாமாக யாருக்கும் எதையும் கொடுக்க மாட்டார்கள் என்பது மட்டுமன்றிப் பிறர் நன்றாக வாழ்வதைக் கண்டாலும் கயவர் பொறுக்கமாட்டார்கள்.

யாராவது நல்ல உடை உடுத்து நல்ல உணவு உண்டு சுகமாக இருப்பதைக் கண்டால் கயவர்கள் அவர்கள்மீது குற்றம் கண்டுபிடித்து அவர்களைத் தூற்றுவதற்குத் தம்முடைய திறமையைச் செலுத்துவார்கள். கயவர்கள் ஒரு நல்ல காரியத்திற்கும் உதவமாட்டார்கள். பின் அவர்கள் எதற்கு உதவுவார்கள் என்றால்

ஏதேனும் சந்தர்ப்பம் கிடைத்தால் தீய காரியங்களைச் செய்யக் கூலிக்காரர்களாகத் தம்மை விலைக்கு விற்று விடத்தான் உதவுவார்கள்.

செல்லத்துரை சாதாரண குமாஸ்தாவாக கொழும்பில் வேலை பார்த்து வந்தார். மாதந்தோறும் சிறு, சிறு தொகையாகச் சம்பளத்தில் மிச்சம் பிடித்து வங்கியில் சேர்த்து வந்தார். சகோதரியின் கலியாணத்திற்காக வங்கியிலிருந்த ரூபா பத்தாயிரத்தையும் எடுத்துக் கொண்டு ஊர்போக விரும்பினார். இதனைக் களுமாத்தயா என்ற வஞ்சகன் வங்கியில் வைத்துக் கவனித்து விட்டான்.

செல்லத்துரை அரை மணித்தியாலத்திற்கு முன்பாக புகையிரதநிலையம் வந்து சேர்ந்தார். களுமாத்தயாவும் கனவானைப்போல உடுப்புடுத்தி இரண்டு மணித்தியாலத்திற்கு முன்பே வந்து காத்திருந்தான். எந்த வகுப்பு உத்தரவுச் சீட்டுப் பத்திரம் பெறுகிறார் என்பதை அவதானித்த களுமாத்தயா தானும் இரண்டாம் வகுப்பு உத்தரவுச்சீட்டு பெற்றுக்கொண்டு செல்லத்துரை ஏறிய பெட்டியிலேயே ஏறினான். "மாத்தயா யாழ்ப்பாணமா செல்லுகிறீர்கள்?" என்று கேட்ட களுமாத்தயா, தானும் யாழ்ப்பாணம் தான் செல்வதாகவும், தனக்கு யாழ்ப்பாணம் புதிது, தனது மைத்துனர் யாழ்ப்பாணத்தில் பொலிசில் வேலை பார்ப்பதாகக் கூறினான். தனது சகோதரியையும் பிள்ளைகளையும் பார்ப்பதற்காக யாழ்ப்பாணம் செல்வதாகக் கூறினான். யாழ்ப்பாணம் வரையும் தனக்கு அவர் உதவி கிட்டியதைக் கூறிப் பாராட்டினான்.

அன்று இரண்டாவது வகுப்பில் அதிக கூட்டம் இல்லை. இருவரும் அரசியல் முதல் அடுப்படி வரை பேச்சுகளைப் பரிமாறிக் கொண்டனர். செல்லத்துரைக்கு சிங்களம் சுமாராக வரும். களுமாத்தயாவுக்கும் தமிழ் தண்ணிபட்டபாடு. ஆதலால் இருவரும் சுவாரஸ்யமாகப் பேசியபடியே பிரயாணம் செய்தனர். பிரயாண அலுப்பே தோன்றவில்லை. பொல்காவலை வந்துவிட்டது. மாத்தயா சாப்பிடுவோம் என்று களுமாத்தயா கூறிக்கொண்டே தனது பெட்டியைத் திறந்து அரைப்போத்தல் சாராயத்தையும் இரண்டு உணவுப் பார்சலையும் எடுத்து வைத்தார். அவற்றில் ஒன்றில் இருபத்தைந்துக்கு மேற்பட்ட இடியப்பங்கள். மற்றதில் ஒரு முழுக்கோழி றோஸ் பண்ணியபடி இருந்தது. ஒரு சிறிய கிளாசை எடுத்து களுமாத்தயா அதைச் சாராயத்தால் நிரப்பிச் செல்லத்துரையிடம் நீட்டினான். செல்லத்துரை தான் குடிப்பதில்லை





என்று மறுத்தார். நாங்கள் என்ன தினமுமா குடிக்கிறோம்? இதை ஒரு நாள் குடிப்பதால் நாங்கள் குடிகாரராகிவிடுவதில்லை. இன்றைக்கு எனக்காகக் குடியுங்கள். நீங்கள் குடிக்காவிட்டால் நானும் குடிக்க மாட்டேன். இதை ஊற்றுவோம் என்ற களுமாத்தயா கிளாசை எடுத்தான். செல்லத்துரை உடனே அதனை வாங்கி ஒரு மடக்கிலே குடித்துவிட்டு கிளாசை களுமாத்தயாவிடம் நீட்டினார். களுமாத்தயாவும் ஒரு கிளாஸ் அடித்துவிட்டு சாப்பாட்டுப் பார்சலை அவிழ்த்தான்.

செல்லத்துரையும் தனது பெட்டிக்குள் இருந்து படடர் பூசிய பாண் பார்சலை எடுத்தார். செல்லத்துரை தயங்கித் தயங்கி பார்சலை அவிழ்த்தார். அதற்கிடையில் களுமாத்தயா இடியப்பத்தில் பாதியை எடுத்து ஒரு இலையில் வைத்து, கோழியிலும் பாதியை வைத்து செல்லத்துரையிடம் நீட்டினான். செல்லத்துரை தயங்கினார். ஐயா நான் பிரயாணத்திற்குப் போகும்போதுஇரண்டு பேருக்கேற்ற சாப்பாடு கட்டிக் கொண்டு போவேன். நீங்கள் கவலையில்லாமல் சாப்பிடுங்கள். களுமாத்தயா ஒரு பாண்துண்டை எடுத்து இரண்டு கடிகடித்தான். செல்லத்துரையாருடைய இலையில் மீதி இடியப்பங்களும் மீதி இறைச்சியும் வந்து விழுந்தன. "காஞ்சமாடு கம்பிலை விழுந்த மாதிரி" என்று சொல்லுவார்களே அப்படி இருந்தது செல்லத்துரையார் பாடு. களுமாத்தயா கைகளுவச் சென்றுவிட்டான். செல்லத்துரையர் இலைகளைக் காலி செய்துவிட்டார்.

களுமாத்தயா வந்தவுடன் செல்லத்துரையர் கை கழுவச் சென்றார். அதற்கிடையில் களுமாத்தயா செல்லத்துரையருடைய பெட்டியில் இருந்த பூட்டைத் தனது பெட்டியில் பூட்டி விட்டு தனது பெட்டியை செல்லத்துரையருடைய இடத்தில் வைத்து விட்டான். பெட்டிகள் இரண்டும் ஒரே மாதிரி, ஒரே அளவு. ஒரே நிறம். வங்கியில் செல்லத்துரையர் காசு மாற்றிப் பெட்டிக்குள் வைத்தபோது இவை எல்லாவற்றையும் களுமாத்தயா கவனித்து வைத்திருந்தானா கையால் இத்திருவிளையாட்டைச் செய்ய முடிந்தது.

மகோ வந்தவுடன் செல்லத்துரையருக்கு களுமாத்தயா ஒரு சிகரற்றைப் பற்ற வைத்துக் கொடுத்தான். இருவரும் தத்தம் பெட்டிகளைத் தலைக்குஅணையாக வைத்துக் கொண்டு நீட்டி நிமிர்ந்து படுத்துக் கொண்டனர். செல்லத்துரையாருக்கு உண்ட மயக்கமும் சிகரற்றின் புகை மயக்கமும் சேர்ந்து உடனேயே குறட்டை விடத் தொடங்கி விட்டார்.

களுமாத்தயா மகிழ்வோடு கல்கமுவாவில் இறங்கிவிட்டான். களுமாத்தயாவின் மகிழ்ச்சி நீடிக்கவில்லை. செல்லத்துரையர் வங்கியில் பெற்றுக் கொண்ட பத்தாயிரம் ரூபாவையும் ஒரு கடையில் பத்து ஆயிரம் ரூபா நோட்டக்களாக மாற்றி, பத்துத் தாளையும் ஒரு என்வலப்பில் வைத்து நன்றாக ஒட்டி தனது அரைக்கால் சட்டை பொக்கற்றில் வைத்துக் கொண்டதை களுமாத்தயா அறிய மாட்டான் தானே. அரைக்கால்சடடைக்கு மேலே ஒரு முழுக்காற்சட்டை, அதற்கு மேலே சாரங்கட்டிக் கொண்டுதான் செல்லத்துரையர் தூங்கினார்.

களுமாத்தயா கல்கமுவா ஸ்ரேசனில் இறங்கிப் பெட்டியைத் திறந்து பார்த்தான். ஒரு கால் சட்டை, ஒரு சட்டை, ஒரு துவாய் இவ்வளவே அதற்குள் இருந்த சொத்துக்கள். களுமாத்தயா தான் ஏமாந்ததை அப்போதான் உணர்ந்தான். செல்லத்துரையர் அநுராதபுரத்தில் ஒரு அரை விழிப்பு விழித்தார். களுமாத்தயா வேறொரு பெட்டியில் வசதியாக தூங்கச்சென்றிருப்பார் என்பது அவருடைய எண்ணம். செல்லத்துரையர் வீடு சென்று பெட்டியைத் திறந்தார். இரண்டு கால்சட்டை, இரண்டு சட்டைகள் ஒரு சாரம் ஒரு பெனியன் காட்சி அளித்தன. ஐயோ! பாவம்! என்று பச்சாதாபப்பட்டார் செல்லத்துரையர். பின்புதான் சிந்தித்துப் பார்த்தார் செல்லத்துரையர். களுமாத்தயா தன்னை ஏமாற்றுவதற்காகவே இந்த நாடகத்தை ஆடியிருக்கிறான். ஆனால் ஏமாந்து விட்டான் என்று பச்சாதாபப்பட்டார்.

“வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்” என்பது தெட்டத்தெளிவாக விளங்குகிறது தானே!

---

**சுவாமி விவேகானந்தரின் அருள்மொழிகள்**

- அன்புக்கு ஜாதியில்லை. பசித்தவனுக்கு உணவாராய்ச்சி இல்லை.
- துயரம் என்பது ஒருபோதும் யாரையும் நெருங்கக்கூடாது என்று நான் தீவிரமாக விரும்புகின்றேன்.
- ஒவ்வொருவரும் விரும்புவதுபோல நான் வளைந்து கொடுகக்கூடியவனாக இருக்கக்கூடாதா என விரும்புகின்றேன். ஆனால் துரதிர்ஷடவசமாக ஒவ்வொருவரையும் திருப்தி செய்விக்கக்கூடிய ஒரு மனிதனை நான் கண்டதேயில்லை.
- நம்மைச் சேர்ப்பதும் கர்மம், பிரிப்பதும் கர்மம்.
- எதுவும் எப்போதுமே நிலைத்து நிற்பதில்லை. வாழ்வும் நிலையானதல்ல.





# சித்திரை வருடப்பிறப்பு

'சிவத்தமிழ்ச்செல்வர்"
செல்லத்துரை சத்தியமூர்த்தி

மேஷ சங்கிராந்தி சித்திரை விஷு எனப்படும். விஷு என்றால் இரவும் பகலும் சமனானது. சூரியன் சித்திரை மாதத்தில் இராசிகளுள் முதலாவதாகிய மேஷ ராசியில் உதயமாவதால் சித்திரை வருடப்பிறப்பு விஷு புண்ணிய காலம் எனப்படும்.

இத்தினத்தில் மருத்து நீர் (பலவகையான மலர்கள், இலைகள், அறுகு, மஞ்சள், பால், முதலானவற்றைக் கொண்டு ஆக்கப்படுவது) தேய்த்து நீராடிப் புத்தாடை அணிகலன்கள் அணிந்து ஆலயவழிபாடு செய்து, இயன்ற தான தருமங்கள் புரிந்து, பெரியோர்களின் ஆசீர்வாதம் பெற்று, உற்றார் உறவினர் இல்லங்களுக்குச் சென்று உறவாடிப் புதுவருட பலன்களை வாசித்தும் கேட்டும் உணர்ந்தும் மங்கலமாகக் கொண்டாடுவர்.

மேலும் மங்கலப் பொருட்கள் அணிந்து இல்லங்களில் பொங்கல் பூஜைகள் புரிந்து, சூரிய நமஸ்காரம் செய்து பிரகாசம் நிறைந்த நல்வாழ்வு வேண்டுவர். இந்நாளில் இவ்வழிபாடும் சிறிது அருகி வருகின்றது.

இச்சுபதினத்தில் இறைவனை மனம் மொழி மெய்களால் வணங்கித் துதித்தால் அந்த வருடம் முழுவதும் விக்கினங்கள் தீர்ந்து தங்கள் காரியங்கள் நிறைவேறுதல் மாத்திரமன்றி நல்வாக்கும் நல்மனமும், இலக்சுமி கடாட்சமும், பிறவித் துன்ப நீக்கமும், நினைத்த நற்காரியங்கள் யாவும் கைகூடுதலுமுண்டாகுமென்று தெய்வானுக்கிரகம் பெற்ற ஆன்றோர்கள் கூறுகின்றனர்.

**சித்திராபூரணை**

பூரணை விரதம், அமாவாசை விரதம் என்னும் இவை பிதிர் விரதங்களாகும். இவ்விரண்டும் முக்கியமானவை. சோதிடர் மாதுருகாரகன், பிதுர்காரகன் எனச் சந்திரனையும் சூரியனையும் கூறுவர். பூரணை விரதம் தாயார்க்குச் செய்யும் விரதமாகும். சித்திரை, ஐப்பசி பூரணைகள் மிகவும் சிறந்தன.

சித்திரை மாதம் தேவர்களுக்குப் பகல் 15 நாழிகை முதல் 90 நாழிகை வரையுள்ள ஐந்து நாழிகைப் பொழுதாகும். அது அவர்கட்கு மத்தியான வேளையாகும். மத்தியான வேளையும் பிதுர்க் காலமும் ஒன்றாதலால், இம்மாதப் பூரணை மிக

விசேடமானதாகும்.

சித்திரை மாதமென்பது சித்திரை நட்சத்திரத்தோடு மதியாகிய சந்திரன் நிற்கும் காலமாகும். அச்சமயம் பூமி மேஷராசியில் நிற்கின்றது. சந்திரன் சித்திரையோடு கூடிச் சித்திரைக்குரிய துலாராசியில் நிற்கின்றது. மேஷத்திலிருந்த துலாம் ஏழாமிடமாதலால், பூமிக்கு ஏழாம் பாகையில் நின்ற சந்திரன் முழு வலிமை பெற்று, முழுக்கிரணத்தையும் சித்திரையின் கிரணத்தோடு கூட்டிப் பூமிக்கு அன்று தருகின்றது. சந்திரனால் பெறவேண்டிய குணக்கிரணத்தில் அந்நாள் விசேடமாயிருத்தலால் சித்திரா பூரணை விசேடமானது. இப்படி ஒருநாள் ஒரு வருடத்தில் வேறு ஏற்பட இடமில்லையாதலின் இத்தினம் மிகமிக விசேஷமானது.

இம்மாதத்துச் சித்திரை நாளில் பிறந்தமையால் சித்திரபுத்திரனார் எனவும், அன்று அனுஷ்டிக்கப்படும் விரதம் சித்திரகுப்த விரதமெனவும் அழைக்கப்படும். இந்திரன் விமானத்தில் இறங்கி இத்தினத்தில் வழிபாடு செய்தான் என்பதால் சித்திரைச் சித்திரை விசேஷமானதெனவும் திருவிளையாடற் புராணம் கூறுகின்றது.

இந்திரன் தனது தீவினை நீங்கப்பெற்று மதுரை சோமசுந்தரப்பெருமானை நோக்கி சுவாமி உமது திருவடித்தாமரை மலர்களையே எந்நாளும் பூசை செய்ய விரும்புகிறேன் என வேண்டியபோது, சோமசுந்தரப்பெருமான், அன்பனே! இருதுகளுள்ளே சிறந்த வசந்தருதுவும், மாசங்களுள்ளே சிறந்த சித்திரை மாதமும் சித்திரை நட்சத்திரமும் திதிகளுள்ளே சிறந்த பௌர்ணமி திதியும் கூடும் சித்திரைச் சித்திரை தோறும் வந்து நம்மைப் பூஜை செய்வாயாக. இதனால் முந்நூற்றறுபத்தைந்து நாளும் பூஜை செய்த பயன் கிடைக்கும். நீ சுவர்க்க லோகத்தில் சென்று பல போகங்களையும் அநுபவித்துக் கொண்டு வாழக்கடவாய். அதன் மேல் உனக்கு மலபரிபாகம் உண்டாக, பிரம்மா, விஷ்ணு முதலிய தேவர்களுடைய பதங்களிலும் பிறவற்றிலும் நிராசையுண்டாகும். அப்பொழுது உனக்குச் சாயுச்சியந் தருவோம் என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார்.

தமிழ்நாட்டில் விசேஷமாக எட்டிக்குடி முருகன் சந்நிதானத்தில் இவ்விழா மிகவும் சிறப்பாக நடைபெறுகிறது. ரொறன்ரோ ஸ்ரீ வரசித்தி விநாயகர் ஆலயத்திலும் இவ்விழா மிகச்சிறப்பாக நடைபெற்று வருகிறது.

இம்மாதப் பூரணையில் விரதமிருந்து தீர்த்தமாடிக் கடமைகள்





புரியின் பித்ருக்கள் சுகமடைவர்.

## சித்திரபுத்திரன் கணக்குப் பார்த்தல்

தூலப் பொருள், சூக்குமப் பொருள் போலவே தூலவுலகம் சூக்குமவுலகம் எனவும் கூறப்படும். மனிதர் இறந்த பின்னர் இறந்துவிட்டோம் என்ற தெளிவு ஏற்படும்வரை வீடுவாசல், மனைவி, மக்களின் பக்கமாக உலாவித் தம்மனதுக்கமையாதவற்றைத் தடுக்கவும், உவந்தவற்றில் தம் மகிழ்ச்சியைத் தெரிவிக்கவும் முயற்சிக்கின்றனர். அது முடியாது போகும் நிலைமையிலேயே உண்மையாக இறந்துவிட்டதாகப் புலப்படுகின்றது. ஆகவே இறந்தவர்கள் ஒருவித மூர்ச்சையடைகின்றனர்.

ஜடவுலகில் கடினப்பொருள், திரவப்பொருள், ஆவிப்பொருள் போன்ற பல நிலைகள் இருப்பதுபோல கா்மலோகம், சுவா்க்கலோகம் முதலான சூக்கும லோகங்களும் படிமுறையான எழுவகைப் பொருட்கள் நிலைகளைக் கொணடனவாய் அமைந்துள்ளன. இறந்தவர்கள் மயக்கத்தில் ஆழ்ந்தவுடன் கா்மலோகத்தின் நடுப்பகுதியாகிய நான்காம் பகுதியில் அதற்கெனவிருக்கும் தூதா்கள் இறந்தவா்களை அங்கு கொண்டு சென்று விடுவா். இந்த நான்காவது படியே யமலோகம் எனப்படும். மூர்ச்சை தெளிவடைந்த பின்னர், பாபம் செய்தோர்களை கா்மலோகத்தின் கீழ் மூன்று படிகளுக்கும் அனுப்பி வைப்பார்கள். இங்ஙனம் அனுப்புவா்களைத்தான் யம தூதுவர்கள் என்றும், இவர்களின் தலைவனையே யமன் என்றும், அவ்வப்பகுதிகளுக்கு அனுப்புவதையே யமலோகத் தீா்ப்பு எனவும் கூறப்படும். மூர்ச்சை தெளிந்தவுடன் இறந்தவா்களின் பாவ புண்ணியத் தன்மைகளைப் பரிசீலனை பண்ணுவதைத்தான் சித்திரபுத்திரனார் கணக்குப் (பேரேடு) பார்த்தல் என்பா்.

உலகின் பல்வேறு மதங்களிலும் பலவிதமாக இதனைக் கூறுவா். கிறிஸ்தவா்கள் இதனை வெளிப்படுத்தல் என்பா். முஸ்லிம் மக்கள் நியாயத்தீா்ப்பு என்பா்.

சாதாரண மக்கள் மதத்தைக் குறித்து மூட்டை மூட்டையாகப் பேசுவார்கள். பேச்சுடன் சரி. அனுட்டானம் இல்லை. ஆனால் ஆன்மீக வாழ்விலே ஊறி மிதக்கும் அநுட்டானம் நிறைந்த பெரியோர் சொற்பமே பேசுவார்கள்.

# சிவயோகசுவாமிகளின் சிவதொண்டன் நிலையம் அநாதைப் பிள்ளைகள், அகதிகள் பராமரிப்பு

ஈழத்தின் வடக்கில் யாழ்ப்பாணத்திலும் கிழக்கே செங்கலடியிலும் முறையே நிறுவப்பட்டிருக்கும் சிவதொண்டன் நிலையங்கள் பாதிக்கப்பட்ட அநாதைப் பிள்ளைகளுக்கும் மற்றும் இடம்பெயர்ந்த அகதிகளுக்கும் ஆறுதல் கொடுத்துத் தற்சமயம் மிகமேன்மையான சிவதொண்டாகிய அன்னதானப்பணியை செவ்வனே செய்கிறார்கள்.

சிவயோக சுவாமிகள் அன்னதானப் பணிக்கு எப்பொழுதுமே முன்னுரிமை கொடுத்து வந்தார்கள். சுவாமிகள் இற்றைக்கு 45 வருடங்களுக்கு முன்பு ஒருநாள் அவரின் ஆச்சிரமத்திலிருந்து மிக உருக்கமாக சத்தத்துடன் 'தமிழனுக்கு கஞ்சி குடிக்கவும் வழி இல்லாத காலம் வரப்போகிறது, எல்லோரும் போய் கமம் விவசாயம், செய்யுங்கள்' என்று முன்னெச்சரிக்கையாகக் கூறினார். எங்கள் தமிழ் மக்களுக்கு ஈழமண்ணிலே அந்த அவல நிலை இன்று ஏற்பட்டிருக்கிறது.

மேற்கூறிய அன்னதானப் பணி தொடர்ந்து நடைபெறுவதற்கு அவசரமாக நிதி உதவி செய்ய வேண்டியது முக்கிய சிவதொண்டும் கடமையுமாகும். ஆகவே இந்தப் புண்ணிய கைங்கரிய பணிக்கு நிதி உதவி செய்ய விரும்பும் சுவாமிகளின் அடியார்களும் மற்றும் அன்பர்கள் யாவரும் பின்வரும் விலாசங்களைத் தொடர்பு கொண்டு உங்கள் நன்கொடை நிதியை அனுப்பலாம்.

உங்கள் உறவினர்கள் ஸ்ரீலங்காவில் இருந்தால் அவர்கள் மூலமாகவும், உங்கள் நன்கொடை நிதியை அங்கு உள்ளூரிலேயே கொடுத்து பற்றுச்சீட்டைப் பெற்றுக் கொள்ளலாம்.

**Sivathiru A. Chellathurai Swamikal**
**Sivathondan Nilayam**
**434 K.K.S. Road**
**Jaffna Srilanka**

**Mr. M. Thillakaratnam**
**Chartered Accountant**
**25/A pamankade lane**
**Wellawatta Colombo - 6**
**Sri Lanka Tel: 2365102**

தானத்தில் சிறந்தது அன்னதானம்'
குருபக்தி வளர்க! சிவதொண்டு வளர்க!

'சிவதொண்டன்'
தில்லையம்பலம் சிவயோகபதி - கனடா
Phone: 416 335 5458





# சைவசமயமும் இந்து சமயமும்

சைவசமயம், இந்துசமயம் ஆகிய இரண்டு சொற்களும் இன்று பெருமளவு குழப்பப்படுத்தப்பட்டுள்ளன. "சைவசமயமே இந்துசமயம்" அல்லது "இந்து சமயமே சைவசமயம்" என்று எண்ணுவோரை இன்று நாம் காணலாம். இவை இரண்டும் ஒன்றல்ல, வரலாறு வழிபடுகடவுள், வழிபாட்டுமுறை, சமயத்தத்துவம், சமுதாய அமைப்பு, அடைவுத்தேவை ஆகிய அனைத்திலும் வேறுபட்டவை.

சைவசமயம் தமிழரது சமய நம்பிக்கைகளையும் வழிபாட்டு முறைகளையும் அடிப்படையாகக் கொண்டது. இந்துசமயம் ஆரியரது சமய நம்பிக்கைகளையும் வழிபாட்டு முறைகளையும் அடிப்படையாகக் கொண்டது. சைவத்தின் தத்துவம் சைவசித்தாந்தம். சைவசித்தாந்தக் கருத்துகள் பழந்தமிழ் நூல்களிலும் திருமுறைகளிலும், மெய்கண்ட சாத்திரங்களிலும் விரவியுள்ளன. இந்து சமயத்தத்துவம் வேதாந்தம், வேதாந்தக் கருத்துக்கள் வேதங்களிலும் உபநிடதங்களிலும் காணப்படுகின்றன.

சைவம் சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டது. திருமுறைகளிலும் சித்தாந்த நூல்களிலும் இதனைத் தெளிவாகக் காணலாம். நாயன்மார் பாடிய இருபதாயிரம் திருமுறைப் பாடல்களே இதற்குத் தக்க சான்றாகும். இவை சிவபெருமானை மட்டுமே வேண்டுகின்றன., ஏற்றுகின்றன, போற்றுகின்றன. இந்துசமயத்திற்கு ஒரு முழுமுதற்கடவுள் இல்லை. இந்துமத நூல்களான வேதங்களே இதற்குத் தக்க சான்றாகும். இவை இந்திரன், வருணன், சோமன், பர்ஜனியன், பிரஜாபதி எனப் பல சிறுதெய்வங்களைப் போற்றுகின்றன. ஏற்றுகின்றன, வேண்டுகின்றன. ஒரு முழுமுதற் கடவுளைக் காண இயலவில்லை.

இந்து சமயம் வேள்வி வழிபாட்டை அடிப்படையாகக் கொண்டது. வேள்வியில் மிருகங்களைப் பலியிட அனுமதிக்கிறது. மது அருந்தலையும் புலால் உண்ணலையும் அது விலக்கவில்லை. சைவம் வேள்வியில் மிருகங்களைக் கொல்வதை ஏற்றுக் கொள்ளவில்லை. புலால் உண்ணலையும், மது அருந்தலையும் அனுமதிக்கவில்லை. இறைவனை அடைய அவனிடம் அன்பு அல்லது பக்தி செலுத்துவதே வழியென்கிறது. வேள்வியை விலக்கி நீராட்டல் (அபிடேகம்) உணவூட்டல் (நைவேத்தியம்) பூத்தூவல் போன்ற வழிபாட்டு முறைகளையே சைவம் காட்டுகின்றது. "நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா" என்ற அப்பர்

தேவாரம் சைவவழிபாட்டு முறையைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

இந்துசமயம் சாதி அமைப்பை அடிப்படையாகக் கொண்டது. ஒரு குறிப்பிட்ட சாதியினரே வேதங்களைப் படிக்கலாம், இறைவனை வழிபடலாம், அவர்களே வீடுபேறும் அடையலாம் என்கிறது. சைவம் சாதி அமைப்பை ஏற்றுக்கொள்ளவில்லை. அனைவரும் ஆகமங்களைக் கற்கலாம். புலையனும் சிவதீட்சை பெற்றுக் கொள்ளலாம். இவ்வாறு பெற்றபின் அவன் பிராமணனுக்கும் குருவாக இருக்கலாம் என்கிறது. மறைஞானசம்பந்தரும் உமாபதியாரும் இதற்குத் தக்க சான்றாகும். இறைவனை யாரும் வழிபடலாம், வழிபட்டு வீடுபேறு அடையலாம் என்பதே சைவத்தின் கொள்கை.

நன்றி
கனடா இந்து மாமன்றம்







சூசனம் குலச்சிறைநாயனார்புராணம்
ஆறுமுகநாவலரவர்கள் எழுதியது

# சைவசமயத்தை வளர்க்க விரும்பல்

புறச்சமயிகளுடைய துர்ப்போதனையினாலே ஆன்மாக்கள் சற்சமயமாகிய சைவத்தை விட்டு அவர்களது சமயப் படுகுழியிலே விழுந்து கெடுதலைக் காணின், மிக இரங்கிக் கவலை கொண்டு, அப்புறச் சமயங்களை ஒழித்து, சைவத்தை வளர்த்தற்கு வேண்டும் முயற்சியைச் சிரத்தையோடு செய்தல் மிக மேலாகிய சிவபுண்ணியமாம். அது செய்யாமை மிகக்கொடிய பாதகமாம். அம்முயற்சி சிரத்தையோடு செய்யப்படுமாயின், வேண்டுவார் வேண்டியதை ஈவாராகிய சிவன் அதனை முற்றுவித்தருளுவர். இக்குலச்சிறைநாயனார் இச்சிவப்புண்ணியத்தால் மிகச் சிறப்புற்றவர் என்பது, சமணர்களுடைய பொய்ச் சமயத்தைக் கெடுத்துப் பாண்டி நாடெங்கும் திருநீற்றை வளர்க்கும் பொருட்டுத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடைய திருவடிகளை வணங்கினமையாலும், வாதிலே அந்நாயனாருக்குத் தோற்ற சமணர்களைக் கழுவிலே ஏற்றுவித்தமையாலும், செவ்விதிற்றெளியப்படும். இவர் இவ்வாறு செய்தபின்பு, பாண்டி நாடெங்கும் புறச் சமயமாகிய இருள்கெடச் சைவசமயமாகிய பேரொளி தழைத்து ஓங்கியதன்றோ? ஆதலால், இதனின் மிக்க புண்ணியம் வேறு இல்லை எனத் தெளிந்து, சைவத்தை வளர்த்தற்குச் சிவனது திருவருளையே முன்னிட்டுக்கொண்டு இடைவிடாது பெருமுயற்சி செய்க.

இந்து சமயப் பேரவைச் செய்திகள்

## தெய்வீக வாழ்க்கை நூல் வெளியீடு

நாவலப்பிட்டியில் வெளிவந்த ஆத்மஜோதியில் ஆத்மீக வள்ளல் நா. முத்தையா அவர்கள் எழுதிய கட்டுரை களைத் தொகுத்து தெய்வீக வாழ்க்கை என்ற நூலும் வைகாசி விசாகப் பெருவிழாவில் வெளியிடப்பட்டது.

சுவாமி விவேகானந்தரின் அருள்மொழிகள்

உங்கள் மனங்களில் அகங்காரத்தை நுழைய விடாதீர்கள். உங்கள் இதயங்களிலிருந்து அன்பு ஒருபோதும் வெளியேறாமல் இருக்கட்டும்.

# ஆத்மஜோதி சேர்த்த ஆன்மீகச் சொத்து

நா. நடேசன் (இளைப்பாறிய ஆசிரியர்)

சாமானிய மக்களுக்குத்தான் சொத்து சேர்க்க வேண்டும் என்ற விருப்பம் உண்டு என்று நாம் நினைக்கிறோம். அவாக்ள் சுகத்தை அனுபவிக்க விரும்புகிறார்கள் என்றும் நினைக்கிறோம். ஆனால், ஞானிகள், யோகிகள், பக்தர்களுக்கும் கூடச் சொத்துச் சேகரிக்க வேண்டும், சுகம் அனுபவிக்க வேண்டும் என்ற பேராசை உண்டு. எங்களுடைய சொத்துக்கும் ஞானிகளின் சொத்திற்கும் எவ்வளவோ வித்தியாசம் உண்டு. அவர்கள் அனுபவிக்கும் சுகத்திற்கும் நாம் அனுபவிக்கும் சுகத்திற்கும் எவ்வளவோ வித்தியாசமுண்டு. நாம் தேடும் சொத்து பிறராற் கவரப்படலாம். அச்சொத்து அழியுந் திறம் கொண்டது. அதனாற் பெறப்படும் இன்பம் சிற்றின்பம் எனப்படும். ஞானிகள் தேடும் இன்பம் பேரின்பமாகும். சிற்றின்பத்தைத் தேடுவோர் தொகை நாளாந்தம் அதிகரிக்கின்றது. ஆனால், பேரின்பத்தை நாடுவோரின் எண்ணிக்கை மிக மிகக் குறைவாகும்.

தாம் தேடும் சொத்தைக் கொஞ்சம், கொஞ்சமாகத் தமக்கே பயன்படுத்துவர். அதிலும் பலர் தேடிப் புதைத்து வைப்பர். தமக்கும் பயன்படுத்தார், பிறரும்அனுபவிக்க விடார். ஆனால் இறையடியார்கள் தம்மை வாட்டி, ஐம்புன்களை அடக்கி, திரிகரணங்களை ஆகும் வழி நிறுத்தித் தேடிய சொத்துத் தான் பேரருள் எனப்படுவது. அச்சொத்துக் கிடைத்தவுடன் சிலர் இருந்த இடத்திலே இருந்துஅவ்வருளை அனுபவித்து அப்பேரருள் வடிவமாகிவிடுகின்றனர்.

இன்னொரு வகையினர் அப்பேரருளைத் தாமும் அனுபவித்து பிறரையும் அழைத்து அவ்வருட்பேற்றை அனுபவிக்கச் செய்கின்றனர். இராமலிங்க வள்ளலார் போன்றோர் "அருட்கனி ஒன்று கிடைத்துவிட்டது. காகம் கலந்துண்பதை நாளாந்தம் காண்கிறீர்களே செகத்தீரே, சேர்ந்து வாருங்கள், கலந்துண்டு நலம் காண வாருங்கள் வாருங்கள்" என அழைப்பார்.

உடல் வளர உணவு அவசியம். உடலின் வளர்ச்சிக்கும், வசீகரத்திற்கும் எடுக்கும் முயற்சியையும், செலவழிக்கும் நேரத்தையும் அளவிட்டுச் சொல்ல முடியாது. எனினும் எந்த ஒரு மானிடனும் தான் நீண்ட காலமாகப் பேணிப் பாதுகாத்த உடலை முதுமையிலிருந்தோ, நோயிலிருந்தோ அல்லது மரணப்பிடியிலிருந்தோ





விடுவித்துக் கொண்டதை நாம் அறியோம். பிறந்தவன் நிச்சயமாக இறப்பான் என்பதை அறிவதற்கு ஆராய்ச்சி நடத்தத் தேவையில்லை. இதை நாம் நாளாந்தம் கண்ணாரக் காண்கிறோம். ஆனால் அழிவற்ற ஆத்மாவின் வளர்ச்சிக்காக நாம் ஒரு சில நிமிடங்களையேனும் செலவழிக்கத் தயங்குகிறோம்.

இறைவழிபாட்டிற்காகக் கொஞ்சம்கூட நேரமில்லை என்கிறோம். வாழ்வின் பெரும்பகுதியை நேரமில்லை! இல்லை என்று உழைப்புக்காகச் செலவிட்டாலும் யாராவது உணவு உண்ணவும், காலைக்கடனை முடிக்கவும் துயில் கொள்ளவும் நேரத்தை ஒதுக்காமல் இருக்கிறோமா? எனவே என்றும் அழியாத ஆத்மாவைப் பிறப்பு, இறப்பு என்ற பிணியிலிருந்து காப்பாற்ற முயல வேண்டும். அதற்காக இறைவழிபாட்டிற்கு ஒரு சில நிமிடங்களையேனும் நாம் தவறாது ஒதுக்க வேண்டும். பேரருளாகிய அமிர்தத்தை ஆத்மா உண்டால் அதனை எப்பிணியும் அணுகாது.

உலகத்தில் உள்ள ஒரு பொருள் கெட்டுப்போனால் அதற்குப் பதிலாக வேறொரு பொருள் கிடைக்கும். மனம் கெட்டு விட்டால் கடைத்தெருவிலிருந்து வேறுமனதை வாங்க முடியுமா? இன்று மனதினைப் பாழ்படுத்தும் சாதனங்கள் பல உண்டு. அவற்றைக் கொண்டும், ஆதம சிந்தனையை வளர்த்து ஆன்மீக உணர்வை உண்டாக்கலாம். ஆத்மஜோதி ஐயா அவாக்ள், ஆத்மீக நூல்களையே தமதுயிர்த்தோழர்களாகக் கொண்டார். எங்கு செல்லினும் அவர்கையில் ஞானிகளின் ஏதாவது ஒரு நூல் இருக்கும். தன் வாழ்நாளிலே இந்தியாவிலும் சரி ஈழத்திலும் சரி வாழ்ந்த அடியார்களைச் சிவபக்தர்களைத் தரிசிக்காமல் விட்டதில்லை. அவர்களுடைய ஆசியைப் பெறாமல் விடடதில்லை.

ஞானிகளின் சகவாசத்தால் எவ்வளவோ ஆத்மீக அனுபவங்களைப் பெற்றார். சுவாமி சுத்தானந்தர், சிவானந்தர், இராமதாசர், அன்னை கிருஷ்ணபாய், ரமணமகிரிஷி, ஈழத்துயோகர் சுவாமிகள் இன்னும் பலரையும் நேரடியாகச் சந்தித்து அவர்களுடைய அருளாசியைப் பெற்றார். சுவாமி சத்யசாயிபாபாவையும் பல தடவைகள் தரிசிக்கும் பேற்றையும் பெற்றார். இவற்றின் பயனாக ஈழத்தில் வாழ்ந்த ஞானிகளையும் சித்தர்களையும் அறிய வேண்டிய ஆவல் அவருக்கு ஏற்பட்டது.

தான் அடைந்த இன்பத்தை ஆத்மஜோதி என்னும் மாதாந்த சஞ்சிகை மூலம் தமிழர்களுக்கு ஊட்டினார். தென்னாபிரிக்கா, இங்கிலாந்து, மலேஷியா, சிங்கப்பூர், இந்தோனேஷியா, சுமாத்ரா,

இந்தியா, கனடா, சுவிஸ் போன்றாடுகளிலும் உள்ள சைவ அன்பர்களும் ஆத்மஜோதியின் மூலம் இறையுணர்வு பெற்றனர்.

சொற்பொழிவு, கூட்டுப்பிரார்த்தனை, நடைபஜனை, அந்தர்யோகம், திருமுறை மகாநாடு, திருமுறை முற்றோதல், திருத்தல யாத்திரை போன்ற நிகழ்ச்சிகள் மூலமும், வானொலித் தொடர் நற்சிந்தனைகள் மூலமும் சைவமக்களிடையே சமய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தினார். தமது இறுதிக்காலத்தில் யாழ்.மாவட்டம், கிளிநொச்சி மாவட்டங்களில் திருத்தலயாத்திரை ஆரம்பித்துத் தானே முன்னின்று வழிநடத்தினார்.

மக்கள் சேவையே மகேஸ்வரன் சேவை என்ற கோட்பாட்டிற்கு ஏற்ப கைதடியில் உள்ள சிறுவர் இல்லம் செவ்வனே இயங்கி வளர்வதற்குரிய அடிப்படை வசதிகளைச் செய்து வைத்தார். வவுனியா அன்பர்கள் முத்தையா மண்டபம் ஒன்றை அவர் நினைவாகக் கட்டியுள்ளனர். இந்தோனேஷிய அன்பர்கள் முத்தையா சைவப்பாடசாலை ஒன்றையும் கட்டி ஆரம்பித்து நடத்தி வருகிறார்கள். இவர் ஆற்றிய சேவையை இன்றும் நினைவுகூரும் வழியில் இவற்றைச் செய்து வைத்த அன்பர்களை என்றும் நாம் மறக்க முடியாது.







## அமரத்துவச் செய்திகள்

### சிவாகமஞானபானு
## சிவஸ்ரீ இலிங்கசாமிக்குருக்கள் சிவஞானசெல்வக்குருக்கள்



இந்தியா - ஸ்ரீசைலம் மல்லிகார்ச்சுன சிவப்பிராமண மரபுவழிவந்தவரும், கிழக்கிலங்கை அக்கரைப்பற்று ஸ்ரீ சித்திவிநாயகர் தேவஸ்தான ஆதீனகுருவும், கனடாவில் முதன்முதல் வெளியிடப்பட்ட ஸ்ரீ சித்திவிநாயகர் வாக்கிய பஞ்சாங்கக் கணிதரும், சிறந்த கல்விமானும், இலங்கை, தென்னிந்தியா மற்றும் வெளிநாடுகள் பலவற்றிலும் அறியப்பட்ட பிரபல சோதிட கணிதரும், ஸ்காபரோ ஸ்ரீ சந்த்ர மௌலீஸ்வர சிவாலய ஆரம்பகர்த்தரும், அம்பாறை மாவட்ட பிரதம குருவுமாகிய வேதாந்த வித்தகர் சிவாகம ஞானபானு சிவஸ்ரீ சிவஞானசெல்வக்குருக்கள் அவர்கள் 31-03-2005 வியாழன் அன்று கனடா-ரொறன்ரோவில் சிவபதமெய்தினார்.

அன்னார் காலஞ்சென்ற முருகேசக்குருக்களின் பெறாமகனும் காலஞ்சென்ற இலிங்கசாமிக்குருக்கள் குஞ்சம்மாள் தம்பதியினரின் மகனும், சினிவாசஐயர் சின்னம்மாளின் மருமகனும், ஸ்ரீமதி தங்கரத்தினம்மாளின் அன்புக்கணவரும், லிங்கசாமி சர்மா, திருச்செல்வாம்பாள், சிவசர்மா என்றழைக்கப்படும் சரவணபவ சர்மா (வீடுவிற்பனை முகவர்) ஆகியோரின் அன்புத்தந்தையும் சிவஸ்ரீ ஸ்ரீதரக்குருக்கள் - கண்ணன் ஐயா (ஸ்ரீ சந்த்ர மௌலீஸ்வர சிவாலயம்), சென்னை இந்தியாவைச் சேர்ந்த விஜயலக்ஷ்மி, பாரதி ஆகியோரின் அன்பு மாமனாரும், அர்ச்சிதாம்பாள், அக்ஷர சர்மா, திருலோஜசர்மா, சிவாக்ஷசர்மா, திவ்யாக்ஷசர்மா, பிரஜாபதி சர்மா, பிரத்தியக்ஷ சர்மா, பிரக்கிருத சர்மா ஆகியோரின் அன்புத்தாத்தாவும் ஜெகப்பிரகாக்ஷசர்மாவின் அன்புப் பெரியப்பாவும், பாலாக்குக்களின் மாமாவும் ஆவார்.

பெரியவரின் பிரிவால் வருந்தும் உறவினருக்கும் ஏனையோருக்கும் ஆத்மஜோதி ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவிக்கின்றது.

## நல்ல மனிதர் நந்தி

நந்தி என்ற பெயரால் எழுத்துலகத்துக்கு நன்கு அறிமுகமான வைத்திய கலாநிதி செல்லத்துரை சிவஞானசுந்தரம் அவர்கள் 04-06-2005ல் தாயகத்தில் காலமாகிவிட்டார்கள்.

வைத்திய சேவையை மக்கள் சேவையாகக் கருதிப் பணியாற்றிய ஒரு நல்ல மனிதர் இவர். முற்போக்குச் சிந்தனையுள்ள சமயவாதியாக விளங்கியவர். ஆத்மஜோதி நா. முத்தையாவின் சமயப்பணிகளுக்குத் துணையாக இருந்தவர். கனடாவில் வெளிவரும் 'ஆத்மஜோதி' சஞ்சிகையுடனும் தொடர்புடையவர். 'வெற்றிமணி' பத்திரிகையில் மாணவருக்கான அறிவுரைக் கட்டுரைகள் பல எழுதியவர். நாவலாகவும் சிறுகதைகளாகவும் கட்டுரைகளாகவும் இவர்தந்த படைப்புகள் பல. பண்புமிக்கப் படைப்பாளி ஒருவரை மனிதாபமுள்ள மருத்துவரை, வாழ்நாள் பேராசிரியரை இழந்து விட்டோம். அவரது பிரிவால் வருந்தும் உற்றார் உறவினருக்கும் மருத்துவத்துறை, எழுத்துலக, சமய உலக அன்பர்கள் யாவருக்கும் 'ஆத்மஜோதி' தனது கவலையைத் தெரிவித்துக் கொள்கிறது.

## சிவசுப்பிரமணியம் அன்னபூரணம்



சிவத்தமிழ் வித்தகர் சிவமகாலிங்கம் ஆத்மஜோதி உதவிஆசிரியர் சிவ முத்துலிங்கம் ஆகியோரின் தாயார் சிவசுப்பிரமணியம் அன்னபூரணம் அவாக்ள் 08-05-2005 புதன் கிழமை ஈழத்தில் அமரத்துவம் அடைந்தார்.

சைவத்தமிழ் உலகிற்கு பணியாற்ற இரு புதல்வர்களைத் தந்த அன்னை அவர்களின் ஆத்மா சாந்தியடைய பிரார்த்திப் போமாக!ஒன்ராறியோ இந்து சமயப் பேரவை நிர்வாகிகளும் அங்கத்த வர்களும், சிவனடியார் திருக்கூட்டத்தினரும், ஆத்மஜோதி பத்திரிகைக் குழுவும் தங்கள் ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்துக் கொள்கின்றனர். அன்னையின் ஈமக்கிரியைகள் பிறந்த கிராமமான குப்பிழானில் 10-06-2005 வெள்ளிக்கிழமை நடைபெற்றது.





# Worship of Navalar

**Introduction**

If English is the language of commerce French the language of diplomacy, Italian the language of love, German the language of philosophy, then Tamil is the language of devotion.

Bakthy and Tamil language is inseparable, Bakthy is love of God. Divine love is Anbu, Bakthy culture is originally south Indian, characteristically Dravidian, specifically; Tamilian. It made its influence all over India and beyond.

Sivasim is an ancient eternal religion without any date or beginning or a founder and it is called Sanathanatharma. It is Prehistoric and remains of Siva worship is found under the Himalayas in the Indus valley civilization.

The followers of Saivasim are Dravidians who lived before the Aryans migrated to India. Lord Siva is the God of Sivites. Siva means Divine love. Thus Thirumular said, Anbus Siva is two says the ignorant, they know not love and Siva is one.

Vishnavism has similar Bakthy they grew side by side, and thank god they never contradicted each other, but existed in unity and harmony. They were Complementray.

By divine will a chain of saints called Nayanmars, and Alvars maintained this unity and harmony. Saivasim consists of divine songs called Thevaram, Thiruvasagam, and other Bakthy songs when sung with fervor will bring grace from God Siva. Time to time great saints appeared on earth to guide the Tamil people to God realization and to meet the challenges of their times to safe Sivasim from perdition. Their voice was the voice of God. They were born to fulfill and not to destroy.

### Footsteps in the sands of time

Among these great saints were born St.Sambanther, St.Appar, St.Sunderer, and St.Manikavasar. Tamils identified them as Avathars of God. At the request made by Lord Siva, St.Suntherer enumrated sixty-three saints and composed a Hymn called Thiruthondarthokay. This is the first recorded evidence we have now.

St.Appar is believed to have existed in he later 6th century; St.Sambanther is believed to have lived in the early 7th century. They met together and made pilgrimages, together making miracles unknown in history. They are revolutionary saints. They made miracles with their songs in Tamil, which are nothing but the voice of God. It was the tradition to make reference of people and places and their names in their Hymns. To this day these songs produces miracles for the devotees of Siva, and hence its continuity. St.Sundarer gave only a brief account of the sixty three saints. This is believed to have taken place in the 9th century. He called himself a servant of the servants of Siva, and other unknown saints. This is the earliest document available now.

St.Appar and St.Sambanthar were contemporaries, St.Appar is very much older took St.Sambanthar who was only a child at the time of meeting. It is believed that St. Appar lived in the late 6th century, and St.Sampanther lived in the early 7th century. While St.Sundarer and St.Manikavasaar lived in the later centruy. These four had been responsible for the greatness and the enduring universal character of the saiva religion as we find it today. They toured the country visiting important shrines singing songs set to music in the popular Tamil language, and captured the imagination all classes of people setting a goal of life to live for. No wonder their Hymns have become the greatest thing cherished in the lives of people, more than women gold and lands, kith deep piety and mystic God experience of the authors themselves of course couched in the most poetic language. These four preceptors are considered to typify in their lives the fourfold paths leading to God realization. They are humble service to God, ceremonial worship, yogic communion, and the way of gnana.

## INTEGRAL YOGA

These paths are naturally not exclusive but always overlap and every one has the element, off all the others, also manifested in his life and action. But this kind of stages seems to have been made for a easy comprehension. This element of unity can be called as integral yoga. St.Thirugnanasambanther is said to typify the life of son of God, his songs are compiled on the first, second





and third Thirumuri. By about 11th century another great poet saint named Nambiandar nambi who was full of the grace of Lord Pillaiyar was recognized by Great king Abayakulasegara RajarajaCholan. both wanted to bring out the songs of the three saints kept hidden in the great Sivan temple called Thillai Cithamparam. But the wise king diplomatically made the Brahmin priests to comply with his request, and made the Great saint to compile them in the best way possible. Thus St.Nambiandar nambi regularized, up dated and documented it in eleven Thirumurai. To this day this Thirumurai is the most sacred document of the Tamil people. He took further interest in finding out the names of the parents, their families and places of birth of the sixty-three saints composed in the hymns of St.Sundarar called Thiruthondarthokai.

Again by twelth century another great Poet named St.Serkilar who was prime Minister to the king Anapaya Chola. He made a complete account of all the saints he could bring into accourt and updated it in 12 Thirumurai. He made full use of Tirutondarthoki of St.Sundarer, and the Thiruthonder Thiruanthathy of St. Nambiandar Nambi. He visited the Holy temples of interest, made a scientific way of investigation and made the first histotical account of all the saints updating the later saints of his time who were not included earlier by Nambi. His accounts were honest and truthful that nobody to the present age could challenge his authority. Further he canonized them in the temple as the most Holy Scripture of the Savites. To this day this book is not only the Holy Book of Saivites, but also a book of miracle. This book is named as Periyapuranam. Because of the greatness it was later translated in Sanskrit, a language though dead but revered. Periyapuranam remains the Holiest book of the Tamil speaking people all over the world. Today Tamil language is not regional, nor Saivism a sectarian religion as understood in the past by foreign writers these saints were born to fulfil and not todestroy. Saivasim has a real message to the present world that needs a healing. It has a message that would bring unity and harmony. One God. and one people.

(To be continued)

# Life of Sambanther
# Let thy words be mine.Son of God.

Life's of great men reminds us that we can make our life sublime.

Saint Sampanther was born in a Holy place called Seerkaly in India. The name of his father was Sivapathevirutayer and his mother was Bagavathy. When as a child he was left alone by his father when to bathe in a pond near a temple while the father dipped in the water, the child unable to see his father any where cried out, Lord Siva and Goddess Parvathy appeared before him and Goddess gave him the divine milk and disappeared. At the age of three he was face to face with Lord Siva and Parvathy. When his father returned from bathing in the river he saw milk in his Childs mouth he enquired as to from whom he got because he worshiped Lord Siva with clustered petals in his previous he had his blessing in this birth, he gave the description of his God vision. He said that this God seated on a bull with Holy ashes on his forehead steals his heart. This miracle happened when this was only three years of age. From this age he moved from temple to temple-singing divine songs. His Hymns are the voice of Lord Siva. Had said thy words (of Lord Siva) be mine,' as a chid he always clapped his hands while singing. Lord Siva finding the pain of this divine child presented him with chime with the letter 'Namasivaya" inscribed on it. He was also presented palanquin to carry him and an umbrella to protect him from bad weather. On his pilgrmage he heard about St.Apper, so he preceeded to meet him. St.Appar on hearing that the child was on his way unobtrusively mingled with the palanquin bearers. On finding St.Appar he went to meet(Appar, but Appar went down touch the feet of the saint child on finding this Sambanther cried out 'Appah" for Appar was very much senior to Sambanthar. This day the name Appar comes to stay. Both of them proceeded together on their pilgrimage visiting holy places. When they entered the City of Madurai at the invitation of the Queen of the

continued Page 37





# தெல்லிப்பழை ஸ்ரீ துர்க்காதேவி தேவஸ்தானம்

## புத்தாண்டு வாழ்த்து
## பார்த்திப வருடப் பிறப்பு

14-04-2005

ஓம் துர்க்கா சரணம்

துர்க்காதேவி திருவருள் துணை நிற்க புத்தாண்டாக 14-04-2005 வியாழக்கிழமை பிறக்கப்போகும் பார்த்திப வருடம் எல்லோர்க்கும் இனிய அமைதியான ஆண்டாக அமைய வேண்டுமென்று எல்லாம் வல்ல துர்க்காதேவியைப் பிரார்த்திக்கிறோம். தங்கள் அனைவருக்கும் எமது புதுவருட வாழ்த்தைக் கூறி அம்பாள் திருவருளால் தாங்கள் எல்லா நலமும் பெற்றுப் பல்லாண்டு வாழவேண்டுமென்று வாழ்த்தி அமைகின்றோம்.

வணக்கம்

கலாநிதி தங்கம்மா அப்பாக்குட்டி, J.P.
தலைவர்
நிர்வாகசபை,
ஸ்ரீ துர்க்காதேவி தேவஸ்தானம்,
தெல்லிப்பழை

---

Pandiyan Queen to bring back the king and the people into the Saiva fold by St.Sambanther Appar was afraid of the evil the enemies of the Queen, Appar wanted to go himself in order to protect Sambanther from harm. But Sambanther decided to go himself thus he sang a song to protect him from evil planets 'Veiyuru tholi pankan vidamunda kandan". His first act was to supplicate before the Lord, and seek guidance for his work. With the help of the holy ash Thiruneeru he healed the king Nedumaran of his high fever and his hunched back, and brought back the king and his subjects to Savasism after winning a debate with the aliens.

## இந்துசமயப் பேரவை அருள்மிகு நல்லூர் முருகன் ஆலயத்தில் நடத்திய நிகழ்ச்சிகள்

# திருப்புகழ் பூர்த்தி விழா

10-04-2005 ஞாயிற்றுக்கிழமை காலை தொடக்கம் மாலை வரை திருப்புகழ் பூர்த்தி விழா நடைபெற்றது. வாரந்தோறும் பிரதிச்சனிக்கிழமைகளில் ஏழு கிழமைகள் நடைபெற்ற அருணகிரிநாதர் பாடல்கள் முற்றோதலில் பக்திசிரத்தை யுடன் பேரவையின் சிவனடியார் திருக்கூட்டத்தினர் பங்கு பற்றினர். திருப்புகழ் காட்டும் முக்தி நெறி என்ற புத்தகமும் முற்றோதிய அடியார்களுக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது. பேரவையின் காப்பாளர் சைவதுரந்தரர் வி. கந்தவனம் அவர்களின் தலைமையின் கீழ் நடந்த விழாவில் பேரறிஞர் முருகவே பரமநாதன் அவர்கள் சிறப்புச் சொற்பொழிவாற்றினார்.

# திருநாவுக்கரசு நாயனார் குருபூசை

2-5-2005 திங்கட்கிழமை திருநாவுக்கரசு நாயனார் குருபூசை பேரவையின் சிவனடி யார் திருக்கூட்டத்தினரால் வெகுவிமரிசையாகக் கொண்டா டப்பட்டது. அப்பர் சுவாமிகளின் 4,5,6ம் திருமுறைகளில் தெரிந்தெடுத்த பதிகங்கள் பசனை முறையில் பாராயணம் செய் யப்பட்டது. அபிசேக ஆராதனைகளும் சிறப்புச் சொற் பொழிவுகளும் இடம்பெற்றன.



# வைகாசி விசாகப் பெருவிழா

மேற்படி பெருவிழாவில் பேரவையின் ஆதரவில் கடந்த ஐந்து வருடமாக நடத்தப்படும் கந்தபுராணச் சுருக்கப் புராண படனப் பூர்த்தி விழாவும் கொண் டாடப்பட்டது. 16 வயதுக்கு உட் பட்ட சிறார்களுக்கு மத்தியில் இஷ்ட தெய்வ நாம ஜெபப் போட்டியும் நடத்தப்பட்டு பங்கு பற்றிய சிறார்கள் அனை வருக்கும் ஆத்மஜோதி சுவாமி களின் படம் பதிந்த மெடல் சூட்டப்பட்டு புத்தகப் பரிசில் களும் வழங்கப்பட்டது. அபிசேக ஆராதனைளும், சிறப்புச் சொற்பொழிவுகளும் இடம்பெற்றது.





# திருஞானசம்பந்தர் குருபூசை

25-05-2005 புதன்கிழமை திருஞானசம்பந்தர் குருபூசை மாலை 3 மணியளவில் ஆரம்ப மாகி வெகுவிமரிசையாக நடை பெற்றது. சம்பந்தரின் 1, 2, 3 ம் திருமுறைகளில் தெரிந் தெடுத்த பாடல்கள் பதிக முறையில் பாராயணம் செய்யப்பட்டது.

அபிசேக ஆராதனை களும், சொற்பொழிவு இடம் பெற்றன.



# பன்னிரு திருமுறை முற்றோதல்

ஆத்மஜோதி முத்தையா சுவாமி களின் நினைவாக பேரவை யினரால் ஆறாவது வருடமாக நடத்தப்படும் திருமுறை முற் றோதல் பிரதிச் சனிக்கிழமைகள் தோறும் 16-04-2005 தொடக்கம் காலை 8:30 மணி தொடக்கம் மாலை 5 மணிவரை முற்றோ தப்பட்டு வருகின்றது. திருக் கூட்டத்தினருடன் ஆர்வமுள்ள திருமுறை ஆர்வலர்களும் பங்கு பற்றி வருகின்றனர். வாரந் தோறும் வெள்ளிக்கிழமை களில் மாலை 4 மணி தொடக் கம் 7 மணிவரை திருமுறைப் பசனை நடத்தப்பட்டு வருகின்றது.

# சைவசித்தாந்தப் பெருமன்ற நூற்றாண்டு விழா

சென்னை மயிலாப்பூரில் இயங்கிவரும் சைவசித்தாந்தப் பெருமன்றத்தின் நூற்றாண்டுவிழா சிதம்பரம் நடராஜப் பெருமானின் சந்நிதியில் யூலை மாதம் 22, 23, 24ம் திகதிகளில் வெகு விமரிசையாக நடைபெறவுள்ளது. உலகெங்கும் இருந்து பல சைவப்பெரியார்கள் இவ்விழாவில் கலந்து கொள்ள உள்ளனர்.

சைவசித்தாந்த கலாநிதி திரு. க. கணேசலிங்கமும் மேற்படி விழாவில் கலந்து சிறப்புரை ஆற்றவுள்ளார்.

# ஆத்மஜோதி முத்தையா சுவாமிகளின் 10வது ஆண்டு நினைவுவிழா

யூலை, ஆகஸ்ட், செப்டெம்பர் மாதங்களில் நினைவுவிழாக்கள் நடைபெற இருக்கின்றது. நினைவு விழாவை முன்னிட்டு நீதிநூல்போட்டி, பேச்சுப்போட்டி திருமுறை மனனப் போட்டி ஆகியன சிறார்களுக்காக நடத்தப்படவுள்ளது. தொடர்பு கொள்ள வேண்டிய தொலைபேசி இலக்கம் 416 724 6240, 416-264-6303

# சேக்கிழார் குருபூசை

10-06-2005 வெள்ளிக்கிழமை சேக்கிழார் குருபூசைமாலை 3 மணிதொடக்கம் 8 மணிவரை நடத்தப்பட்டது. திருமுறைப் பசனையும் தெரிந்தெடுக்கப்பட்ட திருத்தொண்டர் புராணப்பாடல்கள் பாராயணமும் திருக்கூட்டத்தினரால் ஓதப்பட்டது அபிசேக ஆராதனைகளும் சொற்பொழிவுகளும் இடம்பெற்றது.

# அஞ்சலிக்கூட்டம்

இந்து சமயப் பேரவை 10-06-2005 வெள்ளிக்கிழமை நல்லூர் கந்தசாமி ஆலயததில் மறைந்த வைத்திய கலாநிதி செல்லத்துரை சிவஞானசுந்தரம் (நந்தி) அவர்களுக்கும் திருமதி அன்னபூரணம் சிவசுப்பிரமணியம் அவர்களுக்கும் அஞ்சலி செலுத்தியது. கூட்டத்துக்குப் பேரவையின் மூத்த உறுப்பினரும் பொருளாளருமாகிய திரு. செ. சோமசுந்தரம் தலைமை தாங்கினார். கவிஞர் வி. கந்தவனமும் பேரறிஞர் முருக வே. பரமநாதன் அவர்களும் அஞ்சலியுரைகள் செய்தனர்.







# டாக்டர் நந்தியும் ஆத்மஜோதியும்

**சிவ முத்துலிங்கம்**

டாகடர் நந்தி என அழைக்கப்படும் வைத்திய கலாநிதி சிவஞானசுந்தரம் அவர்கள் நந்தி என்ற புனைபெயரில் பல சிறு கதைகளையும் பல நாவல்களையும் எழுதிய பிரபல எழுத்தாளர் ஆவார். டாக்டர் நந்தி அவர்கள் எழுத்தாளர் மட்டுமல்ல ஆன்மீகச் சிந்னையாளருமாவர். இவர் வைத்திய கலாநிதியாகச் சர்வகலாசாலையைவிட்டு வெளியேறியபின் முதன் முறையாக நாவலப்பிட்டி வைத்தியசாலையில் வைத்தியராகப் பொறுப்பேற்றார். அப்பொழுது அவர் துடிப்புள்ள இளைஞன். முற்போக்குச் சிந்தனையுள்ளவர். இவருடைய சிறிய தந்தையார் பேராசிரியர் செல்வநாயகம் பேராதனைப் பல்கலைக்கழகத்தில் கடமை புரிந்துகொண்டிருந்தார். டாக்டர் நந்தியை அவருடைய சிறிய தந்தையார் நாவலப்பிட்டியில் ஆத்மஜோதி ஆசிரியர் திரு. முத்தையா அவர்களைப் போய்க்காணுமாறு பணித்திருந்தார். திரு. சிவஞானசுந்தரம் அவர்கள் நானோ ஒரு டாக்டர், ஆத்மஜோதி ஆசிரியரோ ஒரு தமிழ் ஆசிரியர். இவர் எனக்கு எப்படி உதவி செய்யப்போகிறார் என எண்ணினார். சிறிய தந்தையாரின் வேண்டுகோளுக்காக ஆத்மஜோதி ஆசிரியர் அவர்களைச் சந்திக்கச் சென்றார். அவருடைய முதற் சந்திப்பிலே பெரியார் முத்தையா அவர்களால் ஈர்க்கப்பட்டார். நாவலப்பிட்டி ஆத்மஜோதி நிலையத்தில் இருந்த ஆத்மீக அலைகள் அவரை மிகவும் கவர்ந்துவிட்டன. பெரியார் நா. முத்தையா அவர்களின் ஆத்மீகப் பணிகளில் டாக்டர் அவர்கள் இணைவதற்கு முதற் சந்திப்பே அடித்தளம் அமைத்தது. ஆத்மீகவள்ளல் அவர்கள் மாலை நேரங்களிலும், சனி, ஞாயிறு விடுமுறை தினங்களிலும் ஆத்மீகப் போதனைகளுக்காக மலையகத் தோட்டங்களுக்குச் செல்வது வழக்கம். ஆத்மஜோதியார் ஓய்வு நேரங்களில் டாக்டர் அவர்களையும் அழைத்துக்கொண்டு ஆத்மீகப் போதனைகளுக்குச் செல்வார். தன் ஆத்மீகப் போதனை நிறைவெய்தியவுடன் சுகாதாரம் பற்றியும், உடற் சுத்தம், சுற்றாடல் சுத்தத்தின் அவசியம் பற்றிப் பேசும்படி டாக்டர் சிவஞானசுந்தரம் அவர்களைப் பணிப்பது வழக்கம். டாக்டர் அவர்களும் சுகாதாரத்தைப் பற்றிப் பேசத் தொடங்கி சமயச் சொற்பொழிவாளராகவும் பரிணமித்தார். நீண்டகாலமாக பெரியார் முத்தையா அவர்களுடனும்,

ஆத்மஜோதி நிலையத்துடனும் ஆத்மஜோதி சஞ்சிகையுடனும் தொடர்பு வைத்திருந்த டகர்டர். நந்தி அவர்கள் ஆத்மீகவள்ளல் அவர்களை தன் ஆத்மீக குருவாகவும், வழிகாட்டியாகவும் கொண்டு வாழ்ந்தார். அவரின் ஆத்மீகப் பணிகளுக்கு மிகவும் உறுதுணையாகவும் இருந்தார். ஆத்மஜோதி நிலையத்தில் நடைபெற்ற ஆத்மீக சற்சங்கங்களிலும், மகான்களின் தரிசனங்களிலும் கலந்து கொண்டு ஆத்மீக விழிப்புணர்வு எய்தியதுடன் தன் ஆத்மீக அறிவையும் வளர்த்துக் கொண்டார்.

டாக்டர் அவர்கள் ஆத்மஜோதி முத்தையா அவர்களின் மறைவுக்குப்பின் யாழ்.மாவட்டத்தில் அமைக்கப்பட்ட ஆத்மஜோதி ஞாபகார்த்த சபையின் தலைவராகத் தெரிவு செய்யப்பட்டு அவரின் சிந்தனைகளை பரப்புவதற்கு உறுதுணையாக இருந்தார். மிகவும் தமிழ் உணர்வுள்ள டாக்டர் அவர்கள் 1961ம் ஆண்டு சிங்கள மொழி திணிப்புக்கு எதிராக தமிழரசுக்கட்சி சத்தியாக்கிரக போராட்டம் நடத்திய பொழுது டாக்டர் அவர்கள் யாழ்.போதனாவைத்தியசாலையில் கடமை புரிந்தார். தமிழரசுக் கட்சியினரின் வேண்டுகோளை ஏற்று நோயாளிகள் மருந்து பெறுவதற்காக எழுதிய படிவத்தையும் தமிழிலேயே எழுதினார்.

நல்ல ஒரு வைத்தியர், எழுத்தாளர், சிந்தனையாளர், தமிழ்மொழிப்பற்றாளர், ஒழுக்கசீலர், ஆத்மீக சிந்தனையாளரான டாக்டர் அவர்களின் மறைவு தமிழ் பேசும் நல்உலகுக்கு பேரிழப்பாகும். தன் சிறிய தந்தையார் ஆத்மஜோதி ஆசிரியரை ஏன் சந்திக்கச் சொன்னார் என்பதை உணர தனக்கு பல வருடங்கள் சென்றன என அடியேனுக்கு கடிதத்தில் எழுதியிருந்தார். பெரியார் நா. முத்தையாவின் தொடர்பினால் ஆத்மீக வாழ்வு வாழ்ந்ததுடன் ஒழுக்கசீலராகவும் வாழ முடிந்தது எனக் குறிப்பிட்டிருந்தார். ஆத்மஜோதி சஞ்சிகையின் சார்பில் எங்கள் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். அமரரின் ஆத்மசாந்தியடைய எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திப்போமாக.

**சுவாமி விவேகானந்தரின் அருள்மொழிகள்**

- சொற்பொழிவுகள் கேட்கலாம். நூல்கள் படிக்கலாம் நீண்டநேரம் வம்பளக்கலாம். ஆனால் அனுபவம் என்ற ஒன்று உள்ளதே, அதுதான் ஆசிரியர் கண்ணைத் திறந்து விடும் கருவி.
- உன்னிடம் எல்லையற்ற பொறுமையும்விடா முயற்சியும் இருக்குமானால் வெற்றி வந்தே தீரும். வராமல் போகாது.

## ஞானசுரபி ஆத்மஜோதி நா. முத்தையா அவர்களின் 10வது ஆண்டு நினைவு தின பேச்சுப் போட்டியும் நீதி நூல் மனனப்போட்டியும்

இடம்: அருள்மிகு நல்லூர் முருகன் ஆலயம்

**NO 20 NUGGET AVENUE. UNIT 1**

### நீதிநூல் மனனப்போட்டி விபரங்கள்

காலம்: 14-08-2005 ஞாயிற்றுக்கிழமை மாலை 3:00 மணி

| | வயது | நீதிநூல் தலைப்புகள் |
|---|---|---|
| பாலர் பிரிவு | 4–5 | ஆத்திசூடி 1–15 வரை |
| கீழ்ப்பிரிவு | 6–8 | ஆத்திசூடி 1–30 வரை |
| மத்தியபிரிவு | 9–11 | கொன்றைவேந்தன் 1–50 வரை |
| மேற்பிரிவு | 12–14 | திருக்குறள் அதிகாரம் கல்வி |
| அதிமேற்பிரிவு | 15–17 | கடவுள் வாழ்த்து உட்பட 10 மூதுரைகள் |

விண்ணப்ப முடிவுத் திகதி: 31-07-2005

### பேச்சுப்போட்டி விபரங்கள்

காலம்: 27-08-2005 சனிக்கிழமை மாலை 4:00 மணி

| | வயது | பேச்சுத் தலைப்புகள் |
|---|---|---|
| கீழ்ப்பிரிவு | 6–8 | ஆத்மஜோதி நா. முத்தையா |
| மத்தியபிரிவு | 9–12 | ஆத்மஜோதி நா. முத்தையா அவர்களின் சமயப்பணிகள் |
| மேற்பிரிவு | 13–14 | ஆத்மஜோதி நா. முத்தையா அவர்களின் கல்விப்பணிகள் |
| அதிமேற்பிரிவு | 15–17 | ஆத்மஜோதி நா. முத்தையா அவர்களின சமூகப்பணிகள் |

விண்ணப்ப முடிவுத் திகதி: 31-07-2005

### விண்ணப்பப்படிவம் கிடைக்கும் இடம்

அருள்மிகு நல்லூர் முருகன் ஆலயம் No: 20 Nugget Ave.
முருகன் புத்தகசாலை, 1241 Ellesemere Road

குறிப்பு: இந்துசமயப் பேரவையினரால் ஆத்மஜோதி முத்தையா சுவாமிகளின் ஞாபகார்த்தமாக நடத்தப்படும் திருமுறை மனனப் போட்டி செப்ரெம்பர் மாதத்தில் நடைபெறும். பெயர்களை பதிவு செய்யவும்.

தொடர்புகளுக்கு:
416-724-6240,
416-293-9004
416-264-6303

ஒன்ராறியோ
இந்து சமயப் பேரவை





ஆத்மஜோதி முத்தையா சுவாமிகளின் ஜெயந்தி விழாவை முன்னிட்டு நடத்தப்பட்ட இஷ்ட தெய்வ நாம ஜெபப் போட்டியில் பங்குபற்றிப் பரிசில்கள் பெற்ற சிறார்கள்



# ஆத்மஜோதி சுவாமிகளிடம் கேட்டவை

**திருமுறைச் செல்வர் திரு. சிவ. முத்துலிங்கம்**

1. எனது தாய்நாட்டிற்கும் தாய்நாட்டில் பிறந்த மக்களுக்கும் நன்மைபுரிவதுதான் எனது வாழ்க்கையின் குறிக்கோள்.
2. மிருகங்களுக்கும் பறவைகளுக்கும் இரைதேடித் தம்மைக் காத்துக் கொள்ளும் வகை அறிந்தாலே போதும். மனிதனோ அப்படியில்லை. சமூகத்தில் ஒருவனாக வாழ வேண்டியவன். அவனுக்கு பிழைக்கத் தெரிந்திருப்பதோடு சமூகத்தோடு ஒத்துவாழவும் தெரிந்திருக்க வேண்டும்.
3. பிறரை அழித்து வாழ நினைப்பவன் துரோகி. பிறரைப்பற்றி அக்கறையின்றி வாழ்பவன் சுயநலவாதி. பிறரும் வாழத் தானும் வாழ்பவன் மனிதன். பிறர்வாழத் தன்னை அர்ப்பணிப்பவன் புனிதன். பகைவர் வாழத் தன்னை இழப்பவன் தெய்வீகன்.
4. நீங்கள் விரும்பும் வகையில் ஆண்டவனை பிரார்த்தனை செய்யுங்கள். உங்கள் பிரார்த்தனையைக் கடவுள் நிச்சயம் கேட்பார். எறும்பு ஊர்ந்து செல்லும் ஓசையைக் கூடக் கடவுள் கேட்க வல்லவர்.
5. அமைதி என்பது ஒரு தெய்வீகப்பண்பு. அது ஆன்மீகத்தின் உயரிய தன்மையாகும்
6. அமைதி வேட்கை மிகுந்தவனிடத்தில் வெகுண்டு ஓடிவிடுகின்றது.
7. ஐம்புலன்களையும் மனதையும் கட்டுப்படுத்திய ஆசையற்ற மனிதனின் உள்ளத்தில் அமைதி நிலவுகின்றது.
8. பேராசை, காமம், பொறாமை, கோபம், கர்வம், ஆணவம் இவை அமைதியின் விரோதிகள்.
9. பல பொருட்களை விலைக்கு வாங்கலாம். ஆனால் அமைதியை விலைக்கு வாங்கமுடியாது. பஞ்சணை மெத்தைகளை விலைக்கு வாங்கலாம். ஆனால் நல்ல உறக்கத்தை விலைக்கு வாங்க முடியாது. விதம்விதமான உணவுகளை வாங்கலாம். ஆனால் பசியை வாங்க முடியாது. மிகச் சிறந்த மருந்துகளை வாங்கலாம் நல் ஆரோக்கியத்தை வாங்க முடியாது. நல்ல நல்ல புத்தகங்களை வாங்கலாம். ஆனால் ஞானத்தை விலைக்கு வாங்க முடியாது.
10. உங்கள் உள்ளத்தில் அமைதி நிலவவில்லை என்றால் வெளிப்பொருளிலிருந்து அமைதியைத் தேடுவது வீணாகும்.





11. தங்களை உயர்த்திக் கொணடவர்களால் தான் பிறரை உயர்நிலைக்குக் கொண்டு வர முடியும்.
12. நாள்முழுவதும் பேசும் பேச்சாளரைவிட தன்னை அறிந்த ஒரு துறவியால்தான் உலக அமைதியை ஏற்படுத்த முடியும்.
13. இறை நாமத்தை திரும்ப திரும்ப சொல்லி வந்தால் நீ இறைவனது திருவடி நிழலை அடைவாய்.
14. இறைநாமம் மனிதனை தெய்வீகநிலைக்கு உயர்த்துகிறது. இறைவனது ஒவ்வொரு நாமமும் எல்லையற்ற சக்திவாய்ந்தது.
15. இறைவனது நாமத்தை இடைவிடாது உச்சரிக்கும்பொழுது உச்சரிப்பவனை இறை நாமம் தெய்வத்தன்மை வாய்ந்தவனாக மாற்றி அமைக்கிறது.
16. இறைவனின் நாமம் ரஜோகுணங்கள் தமோகுணங்களை அழிக்கிறது. மனத்தை தூய்மையாலும் சத்துவ குணத்தாலும் நிரப்புகிறது.
17. தினமும் அறநூல்களைப் படித்து அவற்றின் கருத்துக்களை சிந்திக்கும் பழக்கத்தை மேற்கொள்ளுங்கள்.
18. எவ்வளவுக்கு அதிகமாக இறைவனிடம் நீங்கள் நம்பிக்கை கொள்கிறீர்களோ! அவ்வளவுக்கு கடவுள் உங்களை பின் தொடர்வதை நீங்கள் உணர்வீர்கள். உள்ளத்தில் இறை உணர்ச்சி மேலெழ உள்ளத்தில் அளவற்ற அமைதியும், ஆனந்தமும் தவழும்.
19. உலகில் ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் ஒவ்வொரு பருவத்தில் மக்கள் ஒவ்வொன்றைக் கதியாகக் கொள்ளுகிறார்கள். தான் கதியாகக் (பற்றுக்கோடாக) கொண்டவை எல்லாம் உண்மையான கதி அல்ல என்றுணரும்போது தெய்வம் ஒன்றே எக்காலத்திலும் உற்றதுணை என்பதை உணருகிறான். தெய்வம் ஒன்றிடமே பூரணசரணாகதி அடையும்பொழுது தெய்வமே எல்லா இடத்திலும் எல்லா நிலையிலும் துணைஆகிறது.
20. அன்புக்கும், அருளுக்கும், கருணைக்கும் உறைவிடமாக உள்ளவன் ஆண்டவன் ஒருவனே என்பதை பக்தன் உணர்ந்து நம்பிக்கையோடும் பக்தியோடும் வேண்டினால் ஒரு புதிய பலமும் உற்சாகவும், ஆனந்தமும் தனக்குள்ளே ஏற்படுவதை உணருவான்.

21 கடவுள் பக்தர்களிடம் பொன்னையும் பொருளையும் கேட்கவில்லை. அவர் கேட்பது மிக மிகத் தூய்மையான அன்பையேயாகும்.